# செந்தமிழ்ச் செல்வி






சிலம்பு-௫௭] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௩, மார்கழி Jan. '83 [பரல்-௫

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௭ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௪, மார்கழி<br>சனவரி 1983 | பரல் ௫ |
|---|---|---|

# *பொருநைக் கரையில் பாரதி

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் தம் வாழ்நாள் இறுதிக் காலத்தில் ஒருமுறை நெல்லைக்கு வந்திருந்தபோது அவரை நேரில் காணவும் வீறுகொண்ட வெண்கலக் குரலால் அவர் பாடியதைக் கேட்கவும் எனக்கு வாய்ப்புக் கிட்டியது. கல்லூரிப் படிப்பை இடையில் நிறுத்திவிட்டுச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நிறுவும் பணியில் என் தமையனாரும் தவத்திரு மறைமலையடிகளாரின் மருகருமாகிய வ. திருவரங்க னாருடன் இணைந்து செயல்பட்டு வந்தேன். 1920 ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் கழகத் தொடக்கத்திற்கான விதிமுறைகளைச் செப்பஞ் செய்தற்காக நெல்லை வண்ணாரப்பேட்டையிலிருந்த வழக்கறிஞர் வேதநாயகம் பிள்ளை அவர்களைக் காணச் சென்றிருந்தேன். அவர் வீட்டிற்குப் பக்கத்தில்தான் டாக்டர் நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்களும் வாழ்ந்து வந்தார்கள். தமிழறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் அப்போது நெல்லை வழக்குமன்றத்தில் வழக்குரைஞராகத் தொழில் புரிந்து வந்தார்.

ஒருநாள் மாலை நானும் வேதநாயகம் பிள்ளை அவர்களும் உரையாடிக்கொண்டிருக்கையில் நாவலர் சோமசுந்தர பாரதி அவர்கள் அறைக்குள் வந்து 'இன்று சுப்பிரமணிய பாரதி

---

* பாரதியார் நூற்றாண்டு விழா நிறைவினை யொட்டி எழுதப் பெற்றது.

கடையத்திலிருந்து எட்டையபுரத்துக்குச் செல்கிறார், வாருங்கள். இரயில் நிலையத்திலிருந்து இங்கே அழைத்து வரலாம்' என்றார்கள்.

அப்போது வழக்கறிஞர் ச. வையாபுரிப் பிள்ளை அவர்களும் நாவலர் சோமசுந்தர பாரதியாரின் மருகரான திரு. எல். கிருட்டிண சாமி பாரதியாரும் வந்திருந்தனர். அனைவரும் நெல்லைச் சந்திப்பிற்கு மகாகவி சுப்பிரமணிய பாரதியாரவர்களை அழைக்கச் சென்றோம்.

மகாகவி பாரதி அவர்கள் நீண்டகாலம் புதுவையிலிருந்த பின் இந்திய நாட்டிற்குள் நுழையும் உரிமைபெற்றுத் தாம் பிறந்த நெல்லை மாவட்டத்தையடைந்து எட்டையபுரத்தில் தங்கியிருந்தார். அவருடைய துணைவியார் அவ்வமயம் தென் காசியையடுத்த கடையத்தில் இருந்தார். அதுவே அவ்வம்மை யாரின் சொந்த ஊராகும். துணைவியாரைப் பார்த்துவிட்டு எட்டையபுரத்திற்குத் திரும்பிச் சென்றுகொண்டிருந்தார் பாரதி யார். சுதேசமித்திரனுக்கு இரண்டாம் முறையாகத் துணை ஆசிரியப் பணி ஏற்க வருவதற்குச் சற்று முந்திய நாட்கள்.

இரயில் நிலையத்தில் பாரதியாரைப் பார்த்ததும் நாங்கள் பெருமகிழ்ச்சியடைந்தோம். அவரை அழைத்துக்கொண்டு பொருநைக்கரைக்குச் சென்றோம், ஆற்றோரம் மாலைநேரம் வெண்ணிற மணல் குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. நாவலர் பாரதியாரவர்கள் தம் வகுப்புத் தோழரான மகாகவி பாரதியாரைப் பாடுமாறு கேட்டார். உடனே அவரும் தம் கணீரென்ற குரலால் தாம் இயற்றிய கவிதைகளை உரக்கப் பாடினார். நாங்கள் அனைவரும் மெய்சிலிர்க்கக் கேட்டுக் கொண்டிருந்தோம்.

இந் நிகழ்ச்சி நடைபெற்று நீண்டகாலமாகிவிட்டதால் இதைப்பற்றி அன்று உடனிருந்த நாவலர் பாரதியாரின் மருகரும் என் அருமை நண்பருமான திரு எல். கிருட்டிணசாமி பாரதி அவர்கட்குக் கீழ்க்கண்டவாறு கடிதம் எழுதிக் கேட்டிருந் தேன், இவர் திரு கே. இலக்குமிகாந்தன் பாரதி, ஐ.ஏ.எசு. அவர்களின் தந்தையாராவர். தம் சொந்த ஊரான தென் காசியையடுத்த நயினாரகத்தில் இவர் தற்போது வாழ்ந்து வருகிறார்.

'மகாகவி சுப்பிரமணிய பாரதியார் நெல்லை பொருநை ஆற்று மணற்பரப்பில் அமர்ந்து பாடுவதைத் தங்கள் தவ

மாமனார் அவர்களால் கேட்கக்கூடிய வாய்ப்பினைப் பெற்றேன். அப்போது தாங்கள் வந்திருந்ததாக நினைவு. தாங்கள் இந்தக் கல்லூரியில் உயர்வகுப்பில் படித்துக்கொண்டிருந்ததாக நினைக்கிறேன்.

தங்கள் தவமாமனார் தம்மோடு உடன்படித்த வழக்கறிஞர் வேதநாயகம் பிள்ளை, வழக்கறிஞர் ச. வையாபுரிப் பிள்ளை ஆகியோரை மகாகவி பாரதியார் பாடுவதைக் கேட்பதற்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள். யானும் அவர்களோடு சென்றிருந்தேன். 1919 அல்லது 1920ஆம் ஆண்டுத் தொடக்கமாக இருத்தல் வேண்டும். தாங்கள் அந்த நிகழ்ச்சிக்கு வந்திருந்தீர்களா என்றறிய அவா. அந்த ஆண்டைத் தெரிவிப்பின் பெருமகிழ்ச்சி அடைவேன்!'

என் கடிதத்தைக் கண்ணுற்ற நண்பர் திரு எல். கே. பாரதி அவர்கள் உடனே விடையெழுதியனுப்பினார் :

'தண்பொருநை ஆற்று மணற்பரப்பில் அறுபத்தோராண்டுக்கு முன்னர் அன்று மகாகவி பாரதியார் பாடிய போழ்து வந்தவர்களில் அடியேனும் ஒருவன்தான். அது நிகழ்ந்தது 1920ஆம் ஆண்டுத் தொடக்கத்தில். அது போழ்து நான் நெல்லை இந்துக் கல்லூரியில் பத்தாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். தங்கள் நினைவு மிகவும் சரியே. பாரதியார் அன்று பாடிய ஒரு பாட்டு என் அகத்தைவிட்டு அகலவே இல்லை. நான் சென்னையில் சில ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்த்திய வானொலிப் பேச்சு ஒன்றில் இந்தப் பொருநை ஆற்று நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுப் பாரதியார் அன்று பாடிய பாணியில் பாடிக் காட்டினேன். 'வெள்ளை மலர்மிசை வேதக் கருப்பொருளாக விளங்கிடுவாய்' என்று தொடங்குவது பாட்டு. 'தெள்ளு கலைத் தமிழ்வாணி' என்று அன்று பாரதியார் பாடியது தமிழ்வாணியை நேரில் கண்டதுபோல் இருந்தது அல்லவா? என் வானொலிப் பேச்சில் இப் பாட்டைக் கேட்ட பலர், என்னைப் பாராட்டி எழுதினார்கள். வண்ணாரப்பேட்டையில் வேதநாயகம் பிள்ளை வீடு இருந்தது. அந்த வீட்டின் பின்புறம் ஓடுவது தாமிரபரணி ஆற்றுப் பகுதி. அந்த மணற்பரப்பில்தான் இந்த நிகழ்ச்சி நடைபெற்றது. இந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்ட நாம் அனைவரும் கொடுத்து வைத்தவர்கள்தாம். பின்னர் சென்னையில் பலமுறை அவர் பாடியதைக் கேட்கும் பேற்றினைப் பெற்றதுண்டு. அவரோடு உரையாடிடும் வாய்ப்புகளும் கிட்டியதுண்டு. எனது அருமை மாமனார் அவர்களைத் 'தவமாமனார்' என்று தாங்கள் குறிப்பிட்

டுள்ள தங்கள் பெருந்தன்மை நான் போற்றிடப் பெருகும் சிறுமை உடைத்தன்று. வாழ்க தங்கள் இடையருத் தமிழ்த் தொண்டு.

பி. கு. 62 ஆண்டுகளுக்கு முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சியினைத் தாங்கள் நினைவு வைத்திருப்பதைப் பாராட்டுகிறேன். வாழ்க பல்லாண்டு!

அருமை நண்பரின் கடிதத்தைப் படித்தபின் பொருநைக் கரையில் மகாகவி பாரதியார் பாடிய நிகழ்ச்சி பசுமையாக என் மனத்தில் பளிச்சிடத் தொடங்கியது. அந் நிகழ்ச்சி என் வாணாளில் மறக்கமுடியாத பொன்னான நிகழ்ச்சியாகும்.

—வ. சுப்பையா

---

## வளம்பல காண்க நாளும்!

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

''தையெனும் பெண்ணே வா! வா!
திருநிறை வாழ்வைத் தா! தா!
பொய்புரை புன்மை நீங்கிப்
புத்துணர் வெங்கும் பொங்க:
கைகளால் காலந் தோறும்
கடுமையாய் உழைக்கும் மக்கள்
மெய்மையில் மூழ்கி வாழ்க:
வளம்பல காண்க நாளும்!

கருவினில் வளரும் பிள்ளை
காலத்தே புறத்தே வந்து
பெருமையைப் பெற்றோர்க் கீயும்
பெருநிலை 'பொங்கல்' அன்றோ?
அறுவடைத் திருநாள் இஃதை
அருந்தமிழ் மக்க ளெல்லாம்
உரிமையாய் உயர்வால் போற்றல்
உயர் தனிக் கடமை யாகும்!''

# மொழிஞாயிறு பாவாணரின் வேர்ச் சொல்லாய்வுத் தொடக்கம்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

செந்தமிழ்ச் சொற்பிறப்பு ஆய்வையே உயிர்ப்பாகக் கொண்டிருந்தவர் மொழிஞாயிறு பாவாணர். சொற்பிறப்பு ஆய்வுக்கெனவே, இறைவன் தம்மைப் படைத்தருளியதாகப் பேச்சாலும் எழுத்தாலும் முழு நம்பிக்கையுடன் வெளிப்படுத்தியவர் அவர். அவ்வாறே அத் துறையில் ஒப்பாரும் மிக்காரும் இல்லா ஒருவராய் அவர் இலங்கியதும் உண்மை.

1930ஆம் ஆண்டிலேயே பாவாணர், சொல்லாய்வில் தலைப்பட்டார். அதற்கு அடிப்படையாய் அமைந்த இலக்கண நூல்களை ஆய்வதில் ஆழ்ந்தார். ஆங்கிலப் பெரும் புலமையாளர்கள் வரைந்த மொழியியல் ஆய்வு நூல்களின் ஆழமும் கண்டார். "இலக்கண நூல்களில் எனக்கு எல்லையில்லாத பைத்தியமுண்டு" என்று 29—7—'31இல் எழுதிய ஒரு கடிதத்தில் அவர் குறித்துள்ளமை கொண்டு, அவர்தம் இலக்கண ஆர்வத்தை அறியலாம். அவ் வார்வம் பெருகிப் பெருகி ஐம்பானுண்டுகள் வளர்ந்து ஓங்கியமை தனித்தமிழ்ப் பற்றுளர்களால் நன்கனம் அறியப் பெற்றதே.

பாவாணருக்குச் சொற்பிறப்பு ஆய்வு உந்தப் பெற்றது எவ்வாறு?

21—9—40இல் எழுதினர்: "மொழிநூற் பயிற்சி, அக்கலையின் ஆங்கிலப் பெயருக்கு ஏற்ப (L,-Gr. Philos, Loving; logos, Discourse), சென்ற பத்தாண்டுகளாக எனது சிறந்த பற்றுட்டாக இருந்துளது; இன்னுமிருக்கும்.

"பள்ளியிறுதி (School Final) இடைநடுவு (Intermediate) கலையிளைஞர் (B. A.) முதலிய பல்வகைத் தேர்வுகட்கும் உரிய தமிழ்ச் செய்யுட் பாடங்கட்கு, தொடர்ந்து உரை அச்சிட்டு வரும் சில உரையாசிரியர், தமது வரையிறந்த வடமொழிப்பற்றுக் காரணமாக, தென் சொற்களையெல்லாம் வடசொற்களாகக் காட்டவே இவ்வுரை யெழுந்தனவோ என்று தனித்தமிழர் ஐயுறுமாறு கலை - கலா; ஆவீறு ஐயான வடசொல்; கற்பு-கற்ப என்னும் வடசொல்; சேறு-ஸாரம் என்னும் வடமொழியின்

சிதைவு; உலகு - லோகமென்னும் வடசொல்லின் திரிபு; முனிவன் - மோனம் என்னும் வடசொல்லடியாய்ப் பிறந்தது; முகம் - வடசொல்; காகம் - காக என்னும் வடசொல்; விலங்கு - திரியக்ஸ் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு எனப் பல தூய தென்சொற்களையும் வடசொற்களாகத் தமது உரைகளில் காட்டி வருவது பத்தாண்டுகட்குமுன் என் கவனத்தை இழுத்தது. உடனே அச் சொற்களை ஆராயத் தொடங்கினேன்.''

பத்தாண்டுகள் ஆழ்ந்து ஆய்ந்து கண்ட முடிவையும், ஆராய்ச்சி மேற்கொண்ட வகையையும் தொடர்ந்து வரைந்தார்:

''அவற்றின் வேர்களையும் வேர்ப் பொருள்களையும் ஆராய்ந்த போது அவை யாவும் தென்சொல்லென்றே பட்டன. அவற்றை முதலாவது வடமொழிக்கும் தென்மொழிக்கும் பொதுச்சொற்களாகவும், போலிப் பொதுச்சொற்களாகவும் கொண்டு, இவ்வுண்மையை வேறொரு மொழியினின்றும் ஒரு போகு முறையான் உணர்த்துமாறு. ஆங்கிலத்திற்கும் தமிழுக்குமுள்ள பொதுச் சொற்களை ஆராயத் தொடங்கினேன். சேம்பர்ஸ் (Chambers) ஸ்கீற்று (Skeat) என்பவர்களின் ஆங்கிலச் சொல்லியலகராதி (Etymological Dictionary)களைப் பார்த்தபோது, ஆங்கிலத்திற்கும் தமிழிற்கும் பொதுவான சில ஆங்கிலச் சொற்கள் அகப்பட்டதுடன், அவற்றின் வாயிலாகவே, அவற்றின் மூலமாகவோ இனமாகவோ உள்ள சில இலத்தீன் (Latin) கிரேக்கு (Greek)ச் சொற்களும் அகப்பட்டன. பின்பு இலத்தீன் கிரேக்கு அகராதிகளைத் துருவினேன். வேறு சில சொற்களும் எனக்குத் துணையாயின. அவற்றுள் navis (நாவாய்) amor (அமர்-அன்புகூர்) முதலிய இலத்தீன் சொற்களும் telos (தொலை-தூரம்) Palios (பழைய) முதலிய கிரேக்குச் சொற்களும் எனக்குப் பெரிதும் வியப்பையூட்டின.

''இவற்றுடன், தமிழ் இந்திய—ஐரோப்பிய மூலமொழிக்கு மிக நெருங்கியதென்று கால்டுவெல் (Caldwell) கூறியிருப்பதையும், அவரும் குண்டர்ட்டும் (Gundert) வடமொழியிலுள்ள திராவிடச் சொற்களிற் சிலவற்றை எடுத்துக்காட்டியிருப்பதையும், பண்டைத் தமிழகம் தென்பெருங்கடலில் அமிழ்ந்துபோன குமரிநாடென்றும், அந் நாட்டிலேயே தமிழர் தலைசிறந்த நாகரிகத்தை அடைந்திருந்தனரென்றும் தமிழ்த் தொன்னூல்கள் கூறுவதையும், மாந்தன் முதன்முதல் தோன்றினது இலமுரியா (Lemuria-குமரிநாடு) என்று வியன் புலவர் ஹெக்கேல் (Haeckel) கூறியிருப்பதையும் தமிழ் உலக மொழிகள் எல்லாவற்றிலும் எளிய ஒலிகளைக் கொண்டு இயற்கைத் தன்மையுள்ளதாய் அதன் சில

பல சொற்கள் பலமொழிகளிலும் கலந்து கிடப்பதையும் சேர நோக்கினபோது தமிழின் தொன்மை முன்மை தாய்மை முதலிய தனிப்பண்புகள் புலனாயின. பின்பு மொழிநூற்றுறையில் ஆழ இறங்கினேன்.''

பத்தாண்டுகள் மொழிநூற்றுறையில் ஆழ இறங்கி ஆய்ந்த பாவாணர் தம் ஆய்வு முடிவுகளைச் செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப் பொழில் முதலிய இதழ்களில் சிறிதும் பெரிதுமான தனிக் கட்டுரை, தொடர் கட்டுரைகளாக வரைந்தார்.

மொழிநூல் ஆய்வு புதுத் துறையாக இருந்தமையால், புதுமையைப் புதுமையாய்ப் பார்த்தே பழகிப்போன பழமையார் ஒரு வியப்புப் பார்வை பார்த்தனர். வியப்பொடு வெறுப்பையும் இணைத்துப் பார்த்தனர் உண்மை நோக்கில் ஆய்ந்து திருத்தக் குறிப்பு வரைந்து வரவேற்றவர் ஒரு சிலர்; போலிப் பொருமை வயப்பட்டுக் குற்றம் உரைத்தாரும் சிலர். ஆனால், ''உண்மையைப்பற்றிக் கொண்ட ஆராய்ச்சியாளர் ஊக்கமாய் உழைப்பின் முதலிலும் இடையிலும் தவறினாலும் இறுதியில் வெற்றிபெறுவது திண்ணம்'' என்னும் தம் வாக்கைத் தம் ஆய்வுப் படைப்பால் நிலைபெறுத்தினார் பாவாணர்.

'தடுக்கும் கல் ஒன்று, தடத்தைச் செம்மைப் படுத்துதற்கு உதவுகின்றது' என்பது வாழ்வியல் உண்மை. அதனை மொழியியல் உண்மையாக் கண்ட பாவாணர், ''என் கட்டுரைகளைக் குறைகூறி என் முடிபுகள் முன்னிலும் வலிபெறுமாறு செய்த பல நண்பர்கட்கும் யான் மிகவுங் கடப்பாடுடையேன்'' என வரைந்தார்.

திருந்துவதற்குக் குறை கூறுவார் நல்லர்; பயன்மிகு பணி செய்பவர் அவர்; வருந்துவதற்காகவே குறை கூறுவார் பொல்லார்; பொருமை நஞ்சே நெஞ்சாய் உடையவர் அன்னார்.

வேர்ச் சொல்லாய்வில் வேட்கை கொண்டு ஓரிரு கட்டுரை வரைந்த அளவில் அமைந்தார் தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளார். சொற்பிறப்பு ஆய்விலே தலைப்பட்ட ஞானப்பிரகாச அடிகளார் அகரமுதலி நூல் இயற்றத் தொடங்கித் தளர்நடையிட்டார். அத் துறையில் ஐம்பரன் ஆண்டுகள் அழுந்தி நின்று அரும்பணி செய்தார் பாவாணர். மாகறல் கார்த்திகேயரும் மொழிநூல் ஆய்வில் நுழைந்து அக்கால நிலையில் அரும்பணி செய்தார். ஆயின் பாவாணரோ மேலையாரிய—கீழையாரிய—திராவிட—மொழிகளை யொப்பிட்டுக் கால்டுவெல் பெருமகனார் கூறிய 'உயர்தனிச் செம்மொழி' தமிழ்மொழி என்பதை நிறுவிய

துடன், தமிழ் உலக முதன் மொழி என்பதையும் திருவினார். தமிழ்மொழி வரலாற்றில் அவர் காட்டிய ஒப்பீட்டு மொழிகள் 58 என்பதைக் காண்க. அவர்தம் புலமையாழமும் அகலமும் கூர்ப்பும் அத்தகையவை !

''கட்டி வைத்த வீட்டுக்குக் குற்றம் சொல்வோர் கணக்கில ராய் முன் வருவார்'' என்பதுபோல் குறை கூறினாரைக் கண்டு பாவாணர் அயர்ந்தார் அல்லர். 1980இல் எழுதினார் பாவாணர்:

''ஐம்பான் ஆண்டாக மொழியாராய்ச்சி செய்தும், செல்வியில் வெளிவரும் வேர்ச்சொற் கட்டுரைகள் போன்றவற்றை எழுதியும் வரும் ஒருவனை நெறிமுறையறியாது குருட்டுத் தனமாக வரை பவன் என்பது அறியாமையொடு அழுக்காறும் கலந்த இருட்டடிப் பேயன்றி வேறன்று......என் வேர்ச்சொற் கட்டுரைகளில் எடுத்துக்காட்டும் சொற்களினின்றே எழுத்தும் சொல்லும் திரியும் முறைகளைப் பொது அளவு மதியுள்ள எவரும் அறிந்துகொள்ள லாம். அங்ஙனம் அறிந்து கொள்ளாதவர் பெரும்பேதைக ளாகவோ, அழுக்காற்றுப் பிண்டங்களாகவோ கடுந்தமிழ்ப் பகைவராகவோதாம் இருக்க முடியும். தன் மதியும் சொன் மதியும் இல்லாதவர்க்கு என் மதியுண்டு?''

இவ்வீறு, வெறுவீறு அன்று; திருவீறு என்பதை அறிவோம்.

(தொடரும்)

———

**ஆசிரியருக்குக் கடிதம் :**

## சத்துணவும் சமய உணர்வும்

தமிழக அரசு, பள்ளிக்கூடங்களில் பகலுணவு வழங்குவது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. போற்றுகிறோம்; அவ்வண்ணமே பள்ளி யில் பயிலும் மாணவர்கட்கு, அவரவர்க்குரிய சமயக் கல்வி யினையும் ஐந்தாம் படிவத்திலிருந்து அளித்துவர ஆவன செய்தால், மாணவர் ஒழுக்கம் உயரும். அவரவர் சமயம்பற்றிய உணர்வும் பெறுவர். இதனால் அவர்கள் வருங்காலத்தில் நல்லவர்களாகத் திகழ வழியுண்டாகும். நல்ல திட்டங்களைச் செயற்படுத்திவரும் தமிழக அரசும், அதன் கல்வித் துறையினரும் இதுபற்றி ஆய்ந்து நல்லதொரு திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவருமாறு வேண்டுகிறோம்.

116, மொகல் தெரு,
இரங்கூன் (பர்மா)

இங்ஙனம்
மு. அண்ணாமலை

# வள்ளுவர் கூறும் ஒற்று நெறி

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு., புதுவை.]

ஒரு நாட்டின் பாதுகாப்பிற்கும், செல்வாக்கிற்கும் ஒற்றறிதல் மிக முக்கியமானதாகும். ஒற்றறியும் முறை சிறந்ததாக இருந்தால் தான் ஒரு நாட்டைப் பாதுகாக்க முடியும். இன்று ஒற்றறியும் துறையில் சிறந்த நாடுகளாக அமெரிக்கா, உருசியா, இங்கிலாந்து, பிரான்சு மற்றும் இசுரயேல் ஆகிய நாடுகள் கருதப்படுகின்றன. வேந்தனின் ஆட்சியை மாட்சியை நன்கு உணர்ந்தவரான வள்ளுவர் ஒரு குறளில் சீரியதோர் ஒற்றறியும் முறையைப்பற்றிக் கூறியுள்ளார்.

ஒற்றன் ஒருவனை ஒரு பொருளை வேவு பார்க்க ஒரு வேந்தன் பணிக்கும்போது பிறிதோர் ஒற்றனை அதே பொருளைத் தனித்து (Independently) வேவுபார்க்க விடவேண்டும். அது மட்டுமின்றி அதே பொருளை வேவுபார்க்க மூன்றாவது ஒற்றனையும் அனுப்பவேண்டும். இந்த மூன்று ஒற்றர்களும் ஒற்றிக் கண்டுபிடித்த செய்திகளைச் சீர்தூக்கிப் பார்த்து வேந்தன் முடிவுக்கு வந்து செயல்படவேண்டும் என்று வள்ளுவர் கூறியுள்ளார். இக் கருத்தைத்தான் மறைந்த மாமேதை மூதறிஞர் இராசாசி அவர்கள் உள்துறை அமைச்சராக இருந்தபோது ஒற்றறியும் துறையினருக்குக் (Intelligence branch) குறட் கருத்தைத் 'தாரக மந்திரமாக' ஓதினார். இராசாசி அவர்கள் கூறிய சீரிய குறட்கருத்து பின்வரும் குறளில் காணப்படுகின்றது :

"ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்"

—பொருட்பால்—ஒற்றாடல்-8 ஆவது குறள்

மூதறிஞர் இராசாசி அவர்கள் இந்திய ஒற்றறியும் துறையினருக்கு (Indian Intelligence branch) கூறிய திருவள்ளுவரின் கருத்தைப் பின்பற்றுவது எவ்வளவு தவறு என்பதைப் பற்றி அண்மையில் அறிஞர் K. C. கன்னா (Illustrated weekly)-ல் குறிப்பிட்டுள்ளார்:

The secret of his and the Intelligence Bureau's success was that from the beginnings they acted upon Mr, Raja gopalachariar's advice to follow kural's injuctions for

every picce of intelligence, there should be three independent sources of corroboration.

As the years rolled by, the Intelligence branch could not follow kural's salutary behest-through no fault of its own. The Government converted it into an information bureau. Kural's rule of independent corroboration was given up. (The Bugs that devil the I. B. and Raw—K. C. Kanna)

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வள்ளுவர் கூறிய ஒற்றறியும் முறையை இப்பொழுது பின்பற்றுததால் இந்திய ஒற்றறியும் துறையில் ஏற்பட்ட பலவீனத்தைச் சுட்டிக்காட்டி யிருப்பதைக் காணலாம். இதுவரை கூறியதிலிருந்து வள்ளுவர் ஒற்றறியும் துறையையும் நடைமுறையில் கற்றுத் துறைபோகிய மேதையாவார் என்பது விளங்குகின்றது.

———

## திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள்,—பகுதி-1 வெளியீட்டு விழா

மாநில சட்டத்துறை ஆட்சிமொழி ஆணையத்தின் உறுப்பினர் திரு. எஸ். இராஜு செட்டியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் இயற்றிய திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள்—பகுதி-1 என்னும் நூல் வெளியீட்டு விழா, 22—12—82 அன்று முன்னாள் துணை வேந்தர் திரு. தெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் தலைமையில் மயிலை சீனிவாச சாத்திரி ஹாலில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. பேராசிரியர் கு. சிவமணி அவர்கள், வரவேற்புரை ஆற்றினார். உயர்நீதிமன்ற நடுவர் எஸ். மோகன் அவர்கள் நூலினை வெளியிட்டு உரை நிகழ்த்தினார். முனைவர்கள் சி. பாலசுப்பிரமணியம், மா. நன்னன், ந. சுப்பு ரெட்டியார், க. த. திருநாவுக்கரசு, ஔவை நடராசன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். திரு. இராஜு செட்டியார் அவர்களின் ஏற்புரைக்குப்பின் கவிஞர் வைரமுத்து அவர்கள் நன்றி நவின்றார்.

# "பேச்சுவழக்கில் குழூஉக்குறி"

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

கட்குடியர் மதுவைச் 'சொல் விளம்பி' என்பதும் தட்டார் பொன்னைப் 'பறி' என்பதும் குழூஉக்குறிச் சொல்லாட்சிகள் என அறிவோம். தமிழ்மக்களிடை வழங்கும் குழூஉக்குறிச் சொற்க ளனைத்தும் இதுவரை எவராலும் தொகுக்கப்படவில்லை. அண் மையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிக்குச் சொற் றிரட்டும் முயற்சியில் அகரமுதலிப் பணித்தொண்டராக ஈடுபட் டுள்ள தஞ்சைமாவட்டத்துக் கோனையாம் பட்டினத்து நல்லா சிரியர் வ. இராமையன் அப்பகுதித் தொழிலாளர் சிலரிடை வழங்கும் நாட்டுப்புறச் சொல்லாட்சிகளைத் தொகுத்தனுப்பி யுள்ளார். அவற்றுள் குழூக்குறிச் சொற்கள் மிக்குள்ளன. குழூஉக்குறிகளும் காரணம் குறித்தவையாயினும் பிறர தெரிந்திரா வகை தாமே படைத்திட்டுக் கொண்டவை என்னும் சிறப்பு இவற்றுக்குண்டு.

பாப்பு—பொதுமகள் (பாப்பா—பாப்பு, உடம்பின் இள நலம் காட்டி வாழ்பவள்).

பசை—வாழ்க்கை வளம் (பலரும் ஒட்டி உறவாடவரும் செல்வ நிலை).

கசப்பு—காலரா நோய் (மனத்தால் நினைக்கவும் கசக்கின்ற நோய்).

பெயர்ச்சொல்லா—அம்மைநோய் (பெயர் சொல்லக்கூட அஞ்சுகின்ற நோய்).

கடுப்பான்—மிளகாய் (காரத்தால் மிகும் கடுப்பு).

தண்டுமுண்டு—எதிலும் ஆராய்ந்தும் அமைதியாகவும் செய லாற்றத் தெரியாதவன்.

பண்டாரி—சமையற்காரன் (பண்டங்களை ஆள்பவன்).

பொசுப்பு—ஆகூழ் (அதிட்டம்)—ஒருகால் திடுமெனப் பொழிவதாகலாம்.

கொய்யான்—கோமாளி (இட்ட பணியைச் செய்யாமல் வேடிக்கை செய்பவன்).

போக்காளி—இறந்துபோனவன்.

தோரடி—வருத்தம் (ஒருகால் துயரடி—தோரடி எனத் திரிந் திருப்பின் குழூஉக்குறியாகாது).

தருப்பு—பணம் (ஒருகா. தரவேண்டிய தொகை).

கருது—சாராயம் (ஒருகா. கரு—பெரிய, கள்ளினும் மயக்கம் தருவதில் பெரியது).

மடைஞ்சை—தாழ்த்தப்பட்டோர் (ஒருகா. மாடு+அடைந் தோர்—அருகடைந்தோர்).

சிம்லா—கொல்லர் (ஒருகா. செம்பு+ஆளன்—செம்புளா—சிம்லா).

வெக்கை—முடிதிருத்தாளர் [ஒருகா. வீழ்+கை(—விருப்புறு கையினன்)—வெக்கை].

புத்த—வன்னியர் (ஒருகா. பெருத்தோர்—பெத்த—புத்த).

அரும்பி—அரிசி (அரும்புபோன்ற வடிவுடையது).

பூணி பொடியர்—பார்ப்பனர்.

நசுவை—மீன் (ஒருகா. நாச்சுவை—நசுவை).

பெளுட்டை—தசை (ஒருகா. வெந்+அட்டை—வெளுட்டை—பெளுட்டை).

செங்கேரி—மகிழ்ச்சியின் உச்சநிலை.

தவுசல்—சிக்கல் (பிரச்சினை) (ஒருகா. தழுவுதல்—தழுவல்—தவுசல்).

அப்பகுதி தச்சர்கள் உடன்பிறந்தாளைப் 'பிறவி' என்றும் உடன்பிறந்தானை 'பிறவன்' என்றும் அழைப்பது மிகச்சீரிய செந் தமிழ்ச் சொல்லாட்சிகளாகும். 'பிராத்ரு' என்னும் வடசொல் லுக்கும் 'brother' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கும் மூல வித்தாக இவை விளங்குகின்றன.

———

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(முன்னிதழ், கஅசஆம் பக்கத் தொடர்ச்சி)

பன்னிரண்டாவதும் கடைசியுமான பாண்டித்துரைத்தேவர் பாடிய சிந்து 'தலைவனது தகுதி கூறித் தோழி தலைவியைக் குறை நயப்பித்தல்' என்ற தலைப்பைக் கொண்டுள்ளது. பன்னிரு தோளனைப் பன்னிரண்டு சிந்துகளில் பாடிப் பரவி ஆசிரியர் உள மகிழ்கிறார். 'ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க' எனப் போற்றுவர் முருகனடியார். இச் சிந்தில் 'உக்ரபாண்டி யன்றனை அடிமையாளே எனப் பாலனஞ் செய்யுங் குமரவேள்' எனத் தம் பெயரை ஆசிரியர் பொறிக்கிறார். தந்தையார் பொன்னுச் சாமித்தேவர் பிள்ளைத் திருநாமமாக இவர்க்கு இட்ட பெயர் உக்கிரபாண்டியன் என்பது. அப் பெயர் செய்யுள் வழக்கில் மட்டுமே பயின்று வந்தது. நாடறிய வழங்கி வந்த பெயர் பாண்டித்துரை என்பது. உக்கிரபாண்டியன் என்ற இவருடைய பெயர் குறித்து மு. இராகவையங்கார் அளிக்கும் தகவல் சுவை பயப்பதாகும்.

"வடமொழியில் அமைந்த சாதகசந்திரிகை என்ற சோதிட நூலைத் தேவரின் அவைப் புலவருள் ஒருவரான திருநாராயண ஐயங்கார் அவர்கள் அழகிய வெண்பாக்களில் மொழிபெயர்த்து உரையும் எழுதி முடித்திருந்தார்கள். இது பின்பு தேவரவர்கள் அவையில் அரங்கேறி 1897ஆம் ஆு அச்சிட்டு வெளியிடப் பெற்றது. இந் நூலின் ஆசிரியர் என் தந்தையாரிடம் ஆதியில் தமிழ்ப் பயிற்சி பெற்றவர். அதனால், ஆசான் மகனான என்னிடம் அந் நூற்குப் பாயிரக் கவிகள் பெற அவர் விரும்பினர். அவ் விருப்பின்படி சில பாடல்களை நானும் பாடிக் கொடுத்திருந்தேன். மதுரைச் சோமசுந்தரக் கடவுளின் பேர் பெற்ற மாளிகையிலே புலவர்கள் கூடிய கூடலில் உக்கிரபாண்டியன் என்ற அரசர் தமிழ் வளர்ச்சி புரிந்து வருகின்றார். அச் சங்கத்தே இச் சாதக சந்திரிகை அரங்கேறியது' என்ற கருத்து சிலேடை நயம் பெற அப் பாடலொன்றில் அமைந்திருந்தது. அவ்வாறு பாடப்பெற்ற சில வாண்டுகளிலே அவ் வாக்கிற்கிசைய அரிய நிகழ்ச்சியொன்று காகதாலிய நியாயமாக நடந்தேறியது."[1]

---

1. மு. இராகவையங்கார்: செந்தமிழ் வளர்த்த தேவர்கள்.

முருகனே உக்கிரபாண்டியனாகப் பிறந்து தமிழ்ச் சங்கத் தலைமை பூண்டான் என்று சொல்வதுண்டு. குமரகுருபரர் மதுரைக் கலம்பகப் பாடல் ஒன்றில் இதைக் குறிப்பிடுகிறார்.

தமரநீர்ப் புவனம் முழுதொருங் கீன்றாள்
தடாதகா தேவி யென்றொரு பேர்
தரிக்க வந்ததுவும் தனிமுத லொருநீ
சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும் தண்டமிழ் மதுரம்
கூட்டுணா வெழுந்த வேட்கையால் எனில்இக்
கொழிதமிழ்ப் பெருமை யாரறிவார்?

மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் பாண்டித் துரைத் தேவரை,

'தென்மதுரை நகரின் முன்போல் தமிழ்ச்சங்கத்
தாபனஞ்செய் தீரன்'*

என்று ஒரு பாடலில் குறிப்பிடுகிறார். மற்றொரு கடிதப் பாடலில்,

வன்பாண்ட மலந்துமித்து மன்னுயிரைப்
புரந்தருளும் வண்ணம் மேவித்
தென்பாண்டி நாடாளும் சிவக்கொழுந்தைத்
தினந்தோறும் சிந்தித் தேத்தும்
அன்பாண்ட தவக்கொழுந்தை அருந்தமிழின்
இருந்தவத்தை அறத்தின் வைப்பை
என்பாண்டித் துரையையிரு கண்மணியை
இன்னுயிரை இனிது காண்க.*

என்று தீந்தமிழில் பாண்டித்துரைத் தேவருக்குப் புகழ்மாலை சூட்டுகிறார். மதுரையம்பதியில் சங்கம் நிறுவிய சான்றோரின் இருபெயரும் ஒருங்கிணைய உ. வே. சா. இயற்றிய இன்னுமொரு பாடல்.

அந்நாளில் அமிழ்தனைய தமிழ்புரந்த
வாசனையின் அளவால் பாண்டிச்
செந்நாட்டில் இந்நாள்வந் ததுபுரக்கும்
உக்கிரபாண் டியனைக் கற்றோர்
மன்னான உயர்பாண்டித் துரையையெம்ம
னோர்க்கெய்ப்பில் வைப்பா னானை
ஒன்னாதார்க் கரியேற்றை அடைந் தனையான்
அன்படைந்தேற் கொப்பார் மன்னோ.*

---

*உ. வே. சாமிநாதையர் : தமிழ்ப்பா மஞ்சரி (இரண்டாம் பாகம்) 1962. பதிப்பாசிரியர்: கி. வா. ஜகந்நாதன்.

சங்கத்துச் சான்றோர் 'குறை நயப்பித்தல்' என்ற பொருள் அமைத்துப் பாடிய பாடல்கள் உள்ளன. தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறிய செய்யுட்கள் அகநானூறு, கலித்தொகை, குறுந்தொகை ஆகியவற்றில் காணப்படுகின்றன. அறிவுடைநம்பி, உலோச்சனார், கபிலர், பரணர், மருதனிளநாகனார், மோசிகீரனார் என்ற புலவர்கள் இப் பொருள்பற்றிப் பாடினர். தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி அவன் றன்மையும் அவன் தனக்குக் கூறுவனவும் அக் கூற்றுத் தன்னாற் பொறுக்க வொண்ணாதவாறும் அவன் கருத்தும் தலைவிக்குக் கூறி அவன் குறை நயப்பத் தன்னுள்ளே சொல்லியது, கபிலரின் கலித்தொகைப் பாடலில் (47) இடம் பெற்றுள்ளது. தலைமகன் இரப்பான்போ லெளிவந்தும் உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையுமுடையன்; நல்லார் கட்டோன்றும் அடக்கமும் உடையன்; இல்லோர் புன்கணீகையிற்றணிக்க வல்லான் போன்றவன்.

'அன்னா னொருவன் றன் ஆண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ் சொற் கேட்டீ சுடரிழாய்'

என்று தோழி தலைமகட்குக் கூறுகிறாள். இறுதியில் தனக்குள்ளே தோழி சொல்லிக் கொள்கிறாள்.

அவனை,
நாணடப் பெயர்த்தல் நமக்குமாங் கொல்லாது
பேணினே னெனப்படுதல் பெண்மையு மன்றவன்
வெளவினன் முயங்கு மாத்திரம் வாவெனக்
கூறுவென் போலக் காட்டி
மற்றவன் மேனவழி மேவாய் நெஞ்சே.

பாண்டித்துரைத் தேவரின் காவடிச் சிந்தில் தோழி தலைவனாகிய முருகனின் தகுதி கூறுகிறாள். "அரவிந்த நறும் போதை நிகர்க்கும் சுந்தரம் மிகுந்தமாதே! உனைக் கண்டு மையல் கொண்டான்—அவன்தான் சங்கரி மகிழ்ந்தருள் குமாரன்," என்று தோழி தலைவிக்குச் சொல்கிறாள். கடப்ப மலர் மாலையன்; அடியார்க் கெளிய பெருமாள்; வரம் தரும் பெரியவன்; மயிலை ஊர்தியாய்க் கொண்டவன். மலர் வேதனும் அமரரும் பணியும் பாதன்.

அந்தரம டந்தையர்கள் கோடி—நிதம்
வந்துளம கிழ்ந்து துதி பாடி—தொழும்
அம்புயப தன்பெரிதும் நாடி

உனைத்தேடி வந்தால் மோடி—செய்வ
தஞ்சொலின வஞ்சிமுறை யோடி

என்று தோழி தலைவியை வினவுகிறாள். 'சிவஞானபுரியில் வாசஞ் செய்யும் முருகன் நேசம் 'லவலேசம்' கிடைக்குமாவெனப் பலர் ஏங்கி நிற்ப இனிநீ வாதே புரியாதே' என்றும் தோழி உரைக்கிறாள்.

சங்கரிமகிழ்ந்தருள் குமாரன்—செழுந்
தண்பொழிற்கடம்பமலர் ஆரன்—வரம்
தந்தருள் மூந்திடுமுதாரன்
உயர்கிரன் மிகுபேரன்—பொடு
சந்ததம்புகழ்ந்திடுமயூரன்

பொங்குதிரைக் கங்கைநதி ஜாதன்—முகில்
தங்கிடுபரங்கிரியின் நாதன்—முனி
புங்கவர்மனங்களின திதன்
மலர்வேதன்புருகூதன் ஞெடு
புந்தியின்மகிழ்ந்துதொழு பாதன்.

கந்தவரவிந்தநறும் போதே—கீர்
சுந்தரமிகுந்தமுக மாதே—உனைக்
கண்டுமயல்கொண்டனனுன் மீதே
இனிவாதேபுரி யாதே—வந்து
கந்தனையுவந்தணையிப் போதே.

அந்தரமடந்தையர்கள் கோடி—நிதம்
வந்துளமகிழ்ந்துதுதி பாடி—தொழும்
அம்புயபதன்பெரிதும் நாடி
உனைத்தேடி வந்தால் மோடி—செய்வ
தஞ்சொலினவஞ்சிமுறை யோடி.

கானவர்களானவரை நாசம்—செய்து
மானசிவஞானபுரி வாசம்—புரி
சாமிதயவேமிகவிசேஷம்
அவர்நேசம் ஒருலேசம்—வரத்
தக்கதோபிறர்க்கதுப்ரயாசம்.

பானலங்கொள் தேனிகர்சொல் லாளே—உக்ர
பாண்டியன்றனையடிமை யாளே—எனப்
பாலனஞ்செய்யுங்குமரவேளே
நெடுந்தோளே உன்கண் வாளே—கென்று
பாடகையாதேயணையிந் நாளே.

———

# கோச்செங்கணன் யார்?

[டாக்டர் இரா. கலைக்கோவன் M.B.B.S., D.O.]

(முன் இதழ் கசசுஆம் பக்கத் தொடர்ச்சி)

சோழனோடு போரிட்ட இச் சேரமன்னன் யாராக இருக்க முடியும் என்பதைத் தெளிவுபடுத்துவதற்கு முன், இம் மன்னன் சோழனால் சிறைப்படுத்தப்பட்ட செய்தி உண்மைதானா என்பதை யும், அப்படிச் சிறைப்படுத்தப்பட்டிருந்தால், சிறைக்கூடத்தி லிருந்தபடி இம் மன்னன் பாடியதுதான் புறநானூற்றில் 74ஆம் பாடலாக மலர்ந்துள்ளதா என்பதையும், இவனை மீட்கத்தான் பொய்கையார் களவழி பாடினரா என்பதையும், இவன் சிறையில் இறந்தானா அல்லது சிறைமீட்கப்பட்டானா என் பதையும் ஆய்ந்தறிவது நன்று.

"அரசர் பிணங்கான்ற நெய்த்தோர் முரசொடு
முத்துடைக் கோட்ட களிறீர்ப்ப—எத்திசையும்
பௌவம் புணரம்பி போன்ற புனலுடன்
தெவ்வரை அட்ட களத்து"[31]

என்ற களவழி நாற்பது பாடலின் முதல்வரியில் காணப்படும் 'அரசர் பிணங்கான்ற' என்ற தொடருக்கு 'அரசரின் உடல் மறிந்து கிடப்பதனை' என்று நாட்டாரவர்கள் பொருள் எழுது கிறார்கள்.

'நீர்நாட்டையுடைய கோச்செங்கட் சோழன் பகைவரைக் கொன்ற போர்க்களத்தில், அரசர் பிணங்கள் சிந்திய உதிர வெள்ளங்கள் எல்லாத் திசைகளிலும் முரசினோடு, முத்தினை யுடைய கொம்புகளையுடைய யானைகளை இழுப்ப, அவை கடலையும், அக்கடலைச் சார்ந்த மரக்கலங்களையும் ஒத்தன', என்று மேற் கண்ட பாடலுக்கு நாட்டாரவர்கள் உரையெழுதுகிறார்கள்.[32]

களவழி நாற்பது முப்பத்தைந்தாம் பாடலில்,

"உரைசால் உடம்பிடி மூழ்க அரசோ(டு)
அரசுவா வீழ்ந்த களத்து",

31. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, செய்யுள் 37.
32. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, பக். 28.

என்ற வரிகளும் ஈண்டு கவனிக்கத்தக்கன. இதற்குப் பொருள் கூறும்போது, 'புகழமைந்த வேல்கள் குளிப்ப அரசரோடு பட்டத்து யானை மறிந்து வீழ்ந்த களத்தின்கண்' என்று நாட்டாரவர்கள் குறிப்பிடுகிறுர்கள்.[33]

களவழி நாற்பது முப்பத்தொன்பதாம் பாடலின் கடைசி வரியில், 'வஞ்சிக்கோ அட்ட களத்து' என்று புலவர் குறிப்பிடுவதை, 'வஞ்சி அரசனுகிய சேரனைக் கொன்ற போர்க்களத்திலே' என்று உரை விளக்கம் செய்கிறுர் நாட்டாரவர்கள்.[34]

வேல்பட்டு பட்டத்து யானையும் அரசனும் வீழ்வதாக முப்பத்தைந்தாம் பாடலிலும், அரசனது பிணத்திலிருந்து சிதறிய குருதி வெள்ளத்தில் யானை, முரசு முதலியன இழுபட்டுச் செல்வதாக முப்பத்தேழாம் பாடலிலும், வஞ்சியரசனுகிய சேரனைக் கொன்ற போர்க்களமென்று முப்பத்தொன்பதாம் பாடலிலும் புலவர் மிகத் தெளிவாகச் செய்திகளைச் சொல்லியிருக்கின்றுர். எனவே இம் மூன்று பாடல்களின் தெளிவான அடிப்படையில். சோழ மன்னனேடு போரிட்ட சேரவேந்தன், அவன் யாராக இருந்தபோதும், போர்க்களத்தில் மடிந்ததாகக் கொள்வதே பொருத்தமுடையதாகும். களவழி பாடிய புலவரே வஞ்சியரசன் போர்க்களத்தில் மடிந்த செய்தியைத் தெளிவாக்கிவிடுவதால், அம் மன்னன் சோழனுல் சிறைகொள்ளப்பட்டதும், அவனை விடுவிக்கும்பொருட்டே களவழி பாடப்பட்டதென்பதும், அது கேட்டுச் சோழன் சேரனுக்கு அரசளித்தான் என்பதும் பொருந்தாமை காண்க.

ஒட்டக்கூத்தர் உலாவும் சயங்கொண்டாரின் பரணியும் காலத்தால் மிகவும் பிற்பட்ட நூல்கள். அவர்தம் நூல்களில் வழிவழி வரலாறு கூறும் பகுதியில், வழங்கிவந்த செய்திகள் பல இணைக்கப்பட்டுள்ளமை கண்கூடு. அவற்றுள் ஒன்ருகவே செங்கணுன் களவழிக்குச் சேரனைத் தளைவிடுத்த செய்தியைக் கொள்வோமாளுல், களவழி நாற்பது சோழனின் வெற்றியைப் போற்றிப் பாடப்பட்டதே அன்றி, சேரனின் விடுதலை வேண்டிப் பாடப்பட்டதன்று என்பது புலப்படும்.

புறநானூற்றின் 74ஆம் பாடல், நற்றிணையின் 18ஆம் பாடல் இரண்டிலுமே சேரவேந்தனின் பெயர் குறிக்கப்படவில்லை. நற்றிணை பதினெட்டாம் பாடலில், 'பொறையன்' என்ற பெயரே

33. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, பக். 27.

34. களவழி நாற்பது—கழகப் பதிப்பு, பக். 29.

குறிக்கப்படுகின்றது. பொய்கையார், கோக்கோதை மார்பன் என்ற சேரமன்னனைப் பாடிய பாடல்கள் இரண்டு புறநானூற்றில் உள்ளன. அவற்றுள் ஒன்றில்,

"கண்ணு ளும்மே கானலங் தொண்டி
அஃதெம் மூரே அவனெம் இறைவன்",[35]

என்று குறிப்பிடுகிருர். இன்னென்றில்,

"நாடன் என்கோ ஊரன் என்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ
யாங்கன மொழிகோ வோங்குவாள் கோதையை",[36]

என்று குறிப்பிடுகிருர். இவற்றை நோக்கப் பொய்கையாரின் தலைவனுக அவர் காலத்தில், சேர நாட்டையாண்டது கோக் கோதை மார்பனே என்பது தெளிவுபடும். நற்றிணை பதினெட் டாம் பாடலில் 'பொறையன்' என்று குறிக்கப்படுவதும் இக் கோக்கோதை மார்பனுகத்தான் இருத்தல் வேண்டும், என்று கொள்வதே சால்புடையது. கோச்செங்கணுனைப் பாடிக் களவழி இயற்றிய பொய்கையாரும், இக் கோக்கோதை மார்பனைப் பாடிய பொய்கையாரும் ஒருவராக இருக்கும் நிலையில், சோழனுடன் கழுமலத்திலும் வெண்ணியிலும் போரிட்டது இக் கோக்கோதை மார்பனுகவே இருத்தல் வேண்டும். வேறு தெளிவான சான்று கள் புலப்படும்வரையில் இப்படிக் கொள்வதே ஏற்றமுள்ளதாக அமையும். புறநானூற்றுப் பாடல்கள் பிற்காலத்தில் தொகுக்கப் பட்டன. அதனுல் சங்ககாலப் பாடல்களுடன் சங்கத்துக்குப் பிற்பட்ட காலகட்டத்தில் பாடப்பட்ட சில பாடல்களும் சேர்க்கப் பட்டு, புறநானூறு உருவாகியிருக்கலாம். கோக்கோதை மார்ப னைப்பற்றிய பொய்கையாரின் பாடல்கள் புறநானூற்றுள் இடம் பெற்றமைக்கு இதுவே ஒரு காரணமாகலாம். எனவே இதுவரை கண்ட சான்றுகளைக் கொண்டு சோழன் கோச்செங்கணுன், சேரன் கோக்கோதை மார்பன், புலவர் பெருமான் பொய்கையார் மூவரும் சங்ககாலத்திற்குப் பிற்பட்டவர்களே என்ற முடிவுக்கு வருவதில் யாதொரு தடையுமில்லை.

சோழன் கோச்செங்கணுனின் காலத்தை நிறுவுவதில் திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியும், திருமுறைகளும் பெரிதும் உதவுகின்றன. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி யில் மூன்ரும் திருநறையூர்ப் பதிகத்தில் பத்துப்பதிகப் பாடல்

---

35. புறநானூறு—உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு, செய்யுள் 48.

36. புறநானூறு—உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு, செய்யுள் 49.

களிலும் கோச்செங்கணனைப் பாடிப் பரவியுள்ளார். அவர் குறிப்பிடும் வெண்ணிப் போரைப்பற்றி முன்பே கண்டோம். இளந்தைவேள் என்ற வேளிர்குல மன்னன் செங்கணனுக்குப் பகைவனாக இருந்தான் என்பதும், அவனைப் போரொன்றிலே தன் வேலைச் செலுத்தி அழித்த பெருவேந்தன் கோச்செங்கணான் என்பதும்,

> "மின்னாடு வேலேந்து விளந்தை வேளை
> விண்ணேறத் தனிவேலுய்த் துலகமாண்ட
> தென்னாடன் குடகொங்கன்,"[37]

என்ற ஆழ்வாரின் பாடல் வரிகளால் அறியக் கிடக்கின்றன. கோச்செங்கணான் அழுந்தையில் செய்த போரைப்பற்றி,

> "பாராளர் அவரிவரென் றழுந்தை யேற்ற
> படைமன்னர் உடல்துணியப் பரிமா வுய்த்த
> தேராளன் கோச்சோழன்"[38]

எனவரும் வரிகள் மேலும் விளக்குகின்றன. கோச்செங்கணனைக் குறிக்கும்போது, தெய்வவாள் வலம்கொண்ட சோழன், தென் தமிழன் வடபுலக்கோன் சோழன், உலகமாண்ட தென்னாடன் குடகொங்கன் சோழன், தேராலின் கோச்சோழன் என்று பல அடைமொழிகளால் சிறப்புச் செய்யப்படுகிறான். சோழவேந்தனோடு போரிட்ட வேந்தர்களும் கழல் மன்னர், விறல் மன்னர், படை மன்னர் என்று சிறப்பிக்கப்படுகின்றனர். இப் பாடல்களிலிருந்து சோழன் பல போர்களைக் கண்ட பெருவீரன் என்பதும், பெரும்படை போற்றிய மன்னர் பலரை வென்றவன் என்பதும், தென்னவனாய் உலகாண்ட மாமன்னன் என்பதும் புலனாகின்றன. திருஞானசம்பந்தரும் மூன்றாம் திருமுறையில்,

> "திறையுடைக் கிறைசெல்வன்",[39]

என்று கோச்செங்கணனைக் குறிப்பதால், பல மன்னர்களை வென்று திறைபெற்ற பெருவேந்தன் இப் பேரரசன் என்பது பெறப்படுகின்றது. 'வடபுலக்கோன்' என்று இம்மன்னனைத்

37. பெரிய திருமொழி, திருநறையூர்ப் பதிகம், பக். 145, பாடல் எண் 6, திருவேங்கடத்தான் திருமன்றப் பதிப்பு.

38. பெரிய திருமொழி, திருநறையூர்ப் பதிகம், பக். 146, பாடல் எண் 9, திருவேங்கடத்தான் திருமன்றப் பதிப்பு.

39. மூன்றாம் திருமுறை—தருமபுர ஆதீனப் பதிப்பு, திருவைகன் மாடக்கோயில், பக். 85, பாடல் எண் 6.

திருமங்கையாழ்வார் குறிக்கக் காரணம் இருத்தல் வேண்டும் என்பதை டாக்டர் மா. இராசமாணிக்கனுர் அவர்கள் தம் சோழர் வரலாற்றில் மிகத் தெளிவாக ஆய்ந்து விளக்கு கிருர்கள்.[40]

கோச்செங்கணுன் சங்க காலத்து மன்னனுக வாழ்ந்திருப் பின், இப்பெரும் போர்களில் ஏதேனும் ஒன்றைப்பற்றிய குறிப் பேனும் ஏதாவது ஒரு சங்கப்பாடலில் இடம் பெற்றிருக்கும். இம் மன்னன் பெருவேந்தனுக, மன்னர் பலரைப் பொருது வென்றவனுகத் திருமங்கையாழ்வாராலும், சம்பந்தராலும் குறிக் கப்பெறுவதுபோல வேறெந்தப் புலவர்களாலும் குறிக்கப் படவில்லை. சங்க நூல்களில் எங்குமே கோச்செங்கணுன் குறிப் பிடப்படாத நிலையொன்றே இம் மன்னன் சங்க காலத்திற்குப் பிற்பட்டு வாழ்ந்தவன் என்று துணியப் போதுமானதாகும். சங்க காலத்திற்குப் பிற்பட்டும், சிம்ம விஷ்ணுவின் பல்லவப் பேரரசு அமைவதற்கு முற்பட்டும் அமைந்த ஒரு காலகட்டத்தில் (கி. பீ. 300—கி. பி. 600) இம் மன்னன் வாழ்ந்ததாகக் கொள் வதே எவ்வழியினும் பொருத்தமுடையதாகும்.

**கோச்செங்கணுனின் கலைப்பாணியும் இறைத்தொண்டும் :**

இம் மன்னனின் கலைப்பாணியும் இறைத்தொண்டும் சிறப்புக்குரியன. மாடக்கோயில்கள் எழுப்பிய முதல் மன்னன் இப் பெருமகனே.

"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபதுசெய்(து) உலகம்ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன்",[41]

என வரும் பெரிய திருமொழிப் பாசுர வரிகள். இப்பெருமான் எழுபது மாடக்கோயில்களை எழுப்பிய செய்தியைத் தெரிவிக் கின்றன. இத்தகைய இறைபணி செய்த இம் மன்னன் சங்க காலத்தவனுய் இருந்திருப்பின் யாரேனும் ஒரு புலவராவது ஒரு பாடலிலாவது இச்செய்தியைக் கோடிகாட்டாது விட்டிரார். இம் மன்னன் சங்ககாலத்தவன் அல்லன் என்பதற்கு இதுவும் ஒரு சான்ருகும்.

---

40. சோழர் வரலாறு—டாக்டர் மா. இராசமாணிக்கனுர், பக். 13.

41. பெரிய திருமொழி—திருநறையூர்ப் பதிகம், பச். 146, பாடல் எண் 8.

இனி இம் மன்னன் எழுப்பித்த எழுபது மாடக்கோயில் களும் சிவபெருமானுக்கா அல்லது திருமாலுக்கா அல்லது இருவருக்குமா என்பதுபற்றிக் காண்போம்.

''ஈசன்'' என்னும் சொல் சிவபெருமானைத்தான் குறிக்கும் என்பதால், இக்கோயில்கள் எழுபதும் ஈசுவரனுன சிவபெருமானுக்கே எடுப்பிக்கப்பட்டதாகப் பலரும் கருதினர். ஆனல் பெரிய திருமொழியில் பதினெரு இடங்களில் 'ஈசன்' என்ற சொல்லால் திருமங்கையாழ்வார் திருமாலைக் குறிப்பிடுகிருர். பெரிய திருமடலிலும்,

''என் மனத்து மாலை இடவெந்தை ஈசனை'',[42] என்று குறிப்பிடுகிருர். கோச்செங்கணனைப்பற்றிப் பாடும் திருநறையூர்ப் பதிகத்திலேயே,

''கொழுங்கயலாய்ப் பெருவெள்ளம் கொண்ட காலம்
குலவரையின் மீதோடி அண்டத் தப்பால்
எழுந்தினிது விளையாடும் ஈசன் எந்தை
இணையடிக்கீழ் இனிதிருப்பீர்'',[43]

என்று திருமாலை 'ஈசன்' என்ற சொல்லால் குறிக்கிருர்.

(தொடரும்)

---

42. பெரிய திருமடல், பக். 102, வரி 119.

43. பெரிய திருமொழி, மூன்ரும் திருநறையூர்ப் பதிகம், பக். 144, பாடல் எண் 2.

---

## அன்புப் பழம்நீ மணிவிழா

சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத் துணைத் தலைவரும், தமிழ்ப்பணிகளில் நீண்டகால ஈடுபாடுடையவரும், பழனி என்னும் இயற்பெயர்கொண்டவருமான இவர், தவத்திரு சுத்தானந்தபாரதி அவர்களால் 'அன்புப் பழம்நீ' என்று அன்புடன் அழைக்கப்பெற்ற காரணத்தால் தமிழ் அன்பர்களிடையே அன்புப் பழமாக நடமாடி வருகிருர். இவரது 60ஆம் ஆண்டு நிறைவு மணிவிழா 14—12—82 அன்று ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தில் சிறப்பாக நடைபெற்றது. தமிழ் அன்பர்கள் பலர் வாழ்த்துரை வழங்கினர். மன்றச் செயலாளர் திரு. பக்தவத்சலம் அவர்கள் நன்றி நவின்ருர். திரு. அன்புப் பழம்நீ அவர்கள் மேலும் பல்லாண்டுகள் வாழ வாழ்த்துகிருேம்.

# ஒப்புமைக் காப்பியம்

[மது. ச. விமலானந்தம், எம். ஏ., எம். ஃபில்
தமிழ்ப் பேராசிரியர், அரசுக் கலைக் கல்லூரி, கரூர்]

ஒன்றன் உயர்வு மற்றொன்றின் மூலமே நன்றாய்த் தோன்றுகிறது. நன்கு வெளிப்படுகிறது. ஒப்புமையாலும் உறழ்வாலும் (Comparison and Contrast) உயரிய கருத்துகள்—உயரிய காட்சிகள்—உயர்ந்த உண்மைகள் உள்ளத்தில் தெள்ளிதின் பதிகின்றன. இத்தகு உத்தியை வைத்து உண்மையை உணர வைக்கும் வித்தகம் மிகச் சிலருக்கே இயல்பாக வாய்க்கும். அத்தகு அருமை அரச முனிவர் இளங்கோவுக்கு இயல்வது காணலாம்; இத் திறம் சிலம்பில் ஊடுருவி நின்று உள்ளத்தை அள்ளுவது அறியலாம்; இயல்பாக அமைந்து இலக்கிய விந்தை புரிவது உணரலாம்; சுவை கூட்டிக் காப்பிய நலம் காட்டி வளங்கூட்டுவது தெளியலாம். இப்படி எப்படிச் சிலப்பதிகாரம் ஓர் ஒப்புமைக் காப்பியமாக உருவெடுத்துளது என்பது எண்ணுவாம் :

எடுத்த எடுப்பிலேயே கண்ணகி—கோவலன் இருவர் இயல்பும், இருமுதுகுரவரின் ஏற்றமும் எடுத்தோதப்பெறுகின்றன :

''போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகி'' (மங்கல : 26-29)

''மண்தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலன்'' (மங்கல : 36-39)

கண்ணகி திங்கள்; கோவலன் ஞாயிறு. முன்னது தண்ணியது, பின்னது வெம்மையது: நீலவானில் கோல நிலவு உலாவரினும் அதற்கு ஒளி அளிப்பது என்னவோ கதிரவன்தான்; பத்தினித் தெய்வமான கண்ணகிக்குப் பெற்றி பெருமையெல்லாம் கணவனாலேயே—மங்கல நாணாலேயே.

குலமகள் கண்ணகி, விலைமகள் மாதவி; இருவரும் இரு சுடர்களாக இரு துருவங்களாக இலங்குகின்றனர். இருவரில்

எவரே ஏற்றமுடையர் என்ற எண்ணம் எழுந்தவண்ணம் இருக்கிறது.

சோழன் கரிகாற் பெருவளத்தான் பாண்டியன் நெடுஞ்செழியன்; இருவர் அவையிலும் இரு நாட்டிய நிகழ்ச்சி. ஒன்று—உயர்ந்த ஒன்று. ஒருவனை ஒன்றும் செய்யவில்லை; இன்னென்றே—பொதுவான ஒன்றே ஆனாலும் மற்றொருவனை மதிமயங்கச் செய்கிறது. இதனால் முன்னவன் உறுதியாக இருப்பதும், பின்னவன் இறுதி யெய்துவதும் காட்டப்பெறுகிறது. கலையைக் கலையாகச் சுவைக்கிறான் சோழன்; கலையைக் கொலை செய்கிறான்—விலையாக்குகிறான்; சுவைக்கிறான் பாண்டியன். இதனை முறையே இளங்கோ,

"......காவல் வேந்தன்
இலைப்பூங் கோதை யியல்பினின் வழாமை"

(அரங் 159-60)

"கூடன் மகளிர் ஆடற் றோற்றமும்
பாடற் பகுதியும் பண்ணின் பயன்களும்
காவலன் உள்ளங் கவர்ந்தன" (கொலைக் : 131-33)

சுட்டுவதும், அடியார்க்கு நல்லார் தரும் விளக்கமும் இங்கே எண்ணவேண்டும்.

மலைவளங் காண வந்தவிடத்து வேண்மாளிடம் சேர வேந்தன் செங்குட்டுவன் இருபெருங் கற்பினரில் சிறந்த ஒருவரின் ஏற்றமும் சாற்றுமாறு கேட்கிறான்; அன்று; வினாவிடையாக வைத்து விளக்குகிறார் இளங்கோ முனி.

"உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல்! வியக்கு நலத்தோர் யாரென
மன்னவன் உரைப்ப, மாபெருந் தேவி
காதலன் துன்பங் காணாது கழிந்த
பாதரோ பெருந்திரு வுறுக; வானகத்து
அத்திறம் நிற்கநம் அகனாடு அடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென"

(காட்சி : 107 - 14)

முன்னம் எந்த ஆடலும் பாடலும் அழகும் கோவலன்—மாதவி இருவரையும் இணைத்துப் பிணைத்தனவோ அவ் அழகு ஆடல் பாடல் மூன்றுமே அவ் விருவரையும் பிரிப்பதாகப் படிப்படியாகச் சுட்டுவதும், பையக் காட்டுவதும் ஒப்புமை உறழ்ச்சியில் ஊன்றித் தோன்றுகின்றன.

மாதவி தீட்டிய மடல்கள் இரண்டு (வேனிற் : 54-67; புறஞ் சேரி : 86-92) இரண்டனுக்கும் உள்ள பொருள் வேறுபாடும் புலன் மாறுபாடும் மனங்கொளச் செய்யும் மாண்பு மேன்மை யானது. ஒன்று உணர்ச்சியில் உதித்தது, கவர்ச்சியில் காலூன் றியது. இன்னொன்று உணர்வில் எழுந்தது, கருணையில் கால் கொள்வது. முன்னதில் ஆரவாரமும் ஈர்ப்பும் அதிகம்; பின்னதில் அமைதியும் ஆன்ற சான்ருண்மையும் ஆட்சி செய்கின்றன. எனவேதான் அப்படியே தம் பெற்ரேர்க்கு மாற்றிவிடும் பக்குவம் மிக்கதாக அமைந்துவிடுகின்றது.

அடைக்கலம் இரண்டாக அமைகிறது. ஒன்று கவுந்தியிடம், மற்ருென்று மாதரியிடத்து. அடைக்கலம் பேரற்றிய இருவரும், கோவலன் கொலை—கண்ணகி நிலைகண்டு இன்னுயிர் நீப்பதும் எரியகம் புகுவதும் எல்லையற்ற அவலத்தை ஏற்படுத்துகின்றன.

"......மாதரி யெழுந்து
கோவலன் தீதிலன் கோமகன் பிழைத்தான்
அடைக்கலம் இழந்தேன் இடைக்குல மாக்காள்...
இடையிருள் யாமத்து எரியகம் புக்கதும்;
தவந்தரு சிறப்பிற் கவுந்தி சிற்றம்
என்னோடு இவர்வினை யுருத்த தோவென
உண்ணு நோன்போடு உயிர்பதிப் பெயர்த்ததும்"
(நீர்ப் : 74-83)

இருவரின் இருமுது குரவரும் மேற்கொள்ளும் செயல்களும் இன்னும் துன்ப உணர்வு தந்து ஒப்புமையில் உயர்கிறது. (நீர்ப் : 90-102)

மூன்று காண்டங்களிலும் கண்ணகியின் கற்பு—அற—மற—தெய்வீகக் கற்பாகக் கனிந்துவரும் கனிவும் அளவோடு காட்டப் பெறுகிறது.

கண்ணகியின் உறுதியும் தோழி தேவந்தியின் நெகிழ்வும் பிரிந்த கணவரைப் பெறுவதில், 'பீடு அன்று' என்ற பெருஞ் சொல் கொண்டு காட்டப் பெறுகிறது உறழ்ச்சி உயர்ச்சியால்.

காப்பியத்தில் சிலம்பு இரண்டு கதையை நடத்துகின்றது. ஒன்று முடிச்சு போடுகின்றது—களவு—கொலைக்குக் காரணியமா கிறது. மற்ருென்று முடிச்சை அவிழ்க்கின்றது. கள்வன் அல்லன் என்பதனை நிலைநாட்டி நிற்கின்றது. கன்னியரின் கருவிழி இரண்டில் ஒன்று காதல்நோய் தந்து மற்று அந் நோய் நீக்கும் மருந்தாக இன்னொன்று அமையுமாப் போலே!

"இருநோக்கு இவளுண்கண் உள்ளது; ஒரு நோக்கு
நோய்நோக்கு, ஒன்று அந்நோய் மருந்து" (குறள் 1091)

மன்னன் சிலம்பு முத்துடைத்து, வணிகன் சிலம்பு மாணிக்கப் பரலுடைத்து.

தலைவியர் இருவரின் தோழிகள் தேவந்தி—வசந்தமாலை. இருவரும் தம் தலைவியரிடம் கொண்டுள்ள உரிமையும் உறவும் உணர்த்தப்பெறுகிறது ஒரு பார்வையில்.

இரு கனவுகள்: கண்ணகி கண்ட கனவு; கோவலன் கண்ட கனவு. இரு கனவுகளும் ஒன்றுக்கொன்று ஒளி உமிழ்வதும் உரமூட்டுவதும் ஒப்புமையாலே. (கனாத்திறம்: 45 - 53; அடைக் கலக்: 96 - 106).

இரு 'வில்லன்'கள்: ஒன்று கண்ணுக்குத் தெரிந்த பொற் கொல்லன்; மற்றொன்று கட்புலனாகா விதி—ஊழ். இப்படிப் புறப் போராட்டம் அகப் போராட்டம் எனக் காட்சிக்கும் கருத் துக்குமாக இரு போராட்டங்கள் (conflicts) இக் காப்பியத்தில் இயன்று இதயத்தில் ஊன்றுகின்றன.

வண்ணச் சீறடி மண்மகள் அறியா மென்மைக் கண்ணகி; படி தாண்டிச் சென்று பாண்டியன் அவையில் வஞ்சினம் சாற்றும் வன்மைக் கண்ணகி; பாண்டியன் மறைவுக்கு முன் சீற்றக் கண்ணகி; மறைவுக்குப் பின் சாந்தக் கண்ணகி. இப்படி நுண்ணி தின் காட்டும் மாறுபாடு மனங்கொள வைக்கும் மாட்சியே மாட்சி.

வைதிகம்பற்றி விதந்தோத மாங்காட்டு மறையவனையும் சமணம் செப்பக் கவுந்தியையும் படைத்து இரு சமயச் சால்பு காட்டும் செம்மையும் சிந்திக்கத்தக்கது—போக்கு நோக்கத்தக்கது.

முடிமன்னர்களையும் குடி மக்களையும் ஒப்புமையில் வைத்து உணர்த்துகிறார்—முடிமன்னர் காலத்திலேயே குடி மக்கள் காப்பியம் வடித்த முடி துறந்து குடிமகனாகிய இளங்கோ அடிகள். கண்ணகி விண்ணகம் செல்லும் காட்சியின் மாட்சியை நாடாளும் மன்னனுக்குக் காட்டாது, காடாளும் வேடுவர் காணுமாறு செய்த ஆட்சி அருமையுடைத்து. இந்த நுண்ணிய நுட்பமும் கண்ணிய மென்மையும் எண்ணி மகிழத்தக்கன. முடிமன்னரும் குடிமக்களும் இருமுனைகளாக—இணையும் முனைகளாக இயன்றது சிலம்புக் காப்பியம்.

கதை முடிவில் தொடக்க காலக் கோவலனுக்கும் இறுதிக் காலக் கோவலனுக்கும், அதே போல எடுப்புக் கண்ணகிக்கும் முடிப்புக் காலக் கண்ணகிக்கும் மடுவுக்கும் மலைக்கும் உள்ள இடையீடு—ஏற்றத் தாழ்வு எளிதே உணர்த்தப்பெற்றுவிடு

கின்றது. காப்பிய முடிவில் மங்கலத் தொடக்கம்—வாழ்த்து—வரந்தரு முடிவு; இரண்டின் எட்டாநிலை இருவேறு எல்லை எண்ணும்போதும் ஒப்பும் உறழ்வும் உணர்கிறோம்.

எடுத்தோது முறையில்கூட மாதவியின் இன்பக் களிப்பினை—கலவியினைக் கூறும்போது கண்ணகியின் பிரிவுத் துன்பத்தை தனிமைத் துயரினை இணைத்துக் காட்டி அவலத்தை மிகுவிக்கிறார். (அந்திமாலை சிறப்புச் செய்காதை 27 - 56)

பிரிந்த கண்ணகியை நாடிக் கோவலன் வருவதும், இணைந்த மாதவியைப் பிரிந்து போவதும் சுட்ட, முறையே இருவர் கண்ணும் இடத்தினும் வலத்தினும்;துடிப்பதாகக் காட்டிச் சேர்க்கையும் பிரிவும் சித்திரிக்கிறார்.

"கண்ணகி கருங்கணு மாதவி செங்கணும்
உண்ணிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன
எண்ணுமுறை யிடத்தினும் வலத்தினும் துடித்தன."
(இந்திரவிழ : 237-39)

அத்தோடு மூன்று காண்டம், மூவேந்தர், முந்நாடு, முந்நெறி என மும்மூன்றாக வைத்தும்; இரு தலைவியர், இரு நாட்டியம், இரு முடங்கல், இரு கனவு என இரண்டிரண்டாக இயைத்தும் தம் காப்பியம் ஒப்புமை—உறழ்ச்சி இரண்டும் கொண்டு இதயத்தை அள்ளுமாறு செய்த அடிகள் திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலது.

இப்படி ஓர் ஒப்புமைக் காப்பியமாக எப்படிச் சிலம்பினைச் சேர இளவல் அமைத்துச் செப்படி வித்தை செய்துள்ளார் என எண்ணிப் பார்ப்பதே ஓர் இன்பம் அளிக்கிறது. கதைக் கோப்பிலும் காப்பிய அமைப்பிலும் ஒல்லும் வகையான் செல்லும் வாயெல்லாம் ஒப்புமை உரைத்தும் உறழ்ச்சி உணர்த்தியும் செல்கிறார். எதையும்—ஏன்? எல்லாவற்றையுமே ஒப்புமையில் எடுத்தோதுகின்றாரோ என்ற முடிவுக்கும் வர வேண்டியுளது.

இவ் வண்ணம் இன்தமிழ்ச் சிலம்பினை ஒப்பில் ஒப்புமைக் காப்பியமாக ஆக்கி அளித்துள்ளார். (cilapathiharam is done upon a strong study of comparison and contrast) கருத்துக்கு விருந்தாகவும் காட்சி மாட்சியதாகவும் அமைந்து, கருத்தினைக் காட்சியாக்கி, காட்சியைக் கருத்தாக நிறுத்தி அறிவுக்கும் உணர்வுக்கும் ஒருசேர அருவிருந்தாய் அமைந்து அகத்தினைப் பிணிக்கிறது; உவப்பினைத் தருகிறது. இத்தகு ஒப்புமை செப்பத்தாலும் உறழ்ச்சி உயர்வாலும் நெஞ்சையள்ளும் சிலம்பாகச் சிலப்பதிகாரம் விஞ்சி நிற்கிறதோ என்னவோ !

———

# தாரமங்கலம் கங்கை மணாளர்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுத் துணைப்பதிவாளர் (ஓய்வு)
பொள்ளாச்சி.]

சிரித்துப் பகை வெல்லும் சிவபெருமானின் அருள் தரும் திருவுருவங்களில் கங்கையைச் சடையில் கரந்த திருவுருவம் ஒன்று. வெள்ளத்தைத் தன் விரிந்திலங்கு சடையில் சிவன் ஏற்றதை,

"பாரகம் விளங்கிய பகீரதன் அருந்தவம் முயன்ற பணிகண்டு
ஆரருள் புரிந்து அலைகொள் கங்கை சடையேற்ற அரன்"

என திருஞானசம்பந்தப் பெருமானும்,

"அஞ்சையும் அடக்கி ஆற்றல் உடையனாய் அநேக காலம்
வஞ்சமில் தவத்துள் நின்று மன்னிய பகீரதற்கு
வெஞ்சின முகங்களாகி விசையொடு பாயுங் கங்கை
செஞ்சடையேற்றார்[1]

என அப்பர் அடிகளும்,

"பண்டு பகீரதன் வேண்ட
ஆர்த்து வந்து இழியும் புனற் கங்கை நங்கையாளை நின்
[சடைமிசைக் கரந்த
தீர்த்தனே"

என சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தம் தேவாரத் திருப்பதிகங்களில் குறிப்பிட்டுள்ளனர்.

பகீரதனுக்காக ஆயிர மாமுகத்தினோடு பாய்ந்த கங்கையை உலகை உய்விப்பான் வேண்டிச் சிவன் தன் சடையில் ஏற்று வேண்டிய நீரைக் கீழே விடுகின்றார் என்று புராணங்கள் கூறுகின்றன. இதனால் பிறையணிந்த பெம்மானை, "ஆறு சடைக்குடை அப்பன்" என்றும் "நீறணி நிமிர் சடைமுடியாளன்" என்றும் "நீரூர் சடையன்" என்றும் சுந்தரர் போற்றினார். "படர் சடைமேற் புனல் கரந்த படிறன்", என்றும், "புரிசடைமேற் புனலடைத்த புனிதன்" என்றும், "பெண்ணமருஞ் சடை முடியார்" என்றும், தாண்டக வேந்தராம் திருநாவுக்கரசர் பரவுகிறார்.

ஆளுடைய பிள்ளையாம் திருஞானசம்பந்தரோ, "புனலாடிய புன்சடையாய்" என்றும், "நீருலாவிய சென்னியன்" என்றும், "நீரொடுங்குஞ் செஞ்சடையாய்" என்றும் அழைக்கிறார். தேவாரம் பாடியருளிய மூவரும் பெருந்தண்புனலாம் கங்கையைச் சிவன் சடையில் வைத்த பெம்மான் என்றுதான் குறிப்பிட்டுள்ளனர். அலைக்கும் புனலை அணிந்த அண்ணல் சிவன் எனவே அவனை "புனலா" என்றும், "நதியினை" என்றும், "நீரானே" என்றும் சம்பந்தர் கூறுகிறார்.

வெற்பரையன் பாவையாம் உமை ஊடக் கங்கை சடையில் இருக்கும் கருத்து என்ன என்று சம்பந்தர் வினவுகிறார்.

"மங்கை வாணுதல் மான் மனத்திடை வாடியூட மணங்கமழ் சடைக்
கங்கையாள் இருந்த கருத்தாவது என்னைகொலாம்"

இவ்வாறு இரைக்கும் புனலைச் சடையில் வைத்தமைக்கு அப்பர் சுவாமிகள் காரணம் கூறுகிறார். "காதலாற் கரந்தான் சடைக் கங்கையை" என்பது அவரது திருவாக்கு. ஒருத்தி தன் பரதியாக இருக்க, இன்னொருத்தியைத் தன் சடையில் வைத்தால், அவ்வாறு சடையுள் வைத்தமைக்குக் காரணம் காதலாகவும் இருந்துவிட்டால், முன்னரே இருந்த ஒருத்தி ஊடுவது இயற்கையே. இதைத்தான்,

"கொடியிடை முனிவுற நனிவருங்குலவு கங்கை ஆற்றினீர்"

என்று சப்பந்தர் குறிப்பிடுகிறார். உண்மையில் ஊடலைத் தீர்க்க வேண்டிச் சிவன் பாடினான் ஆடினான் என்றெல்லாம் நாவுக்கரசு சுவாமிகள் கூறுகிறார்.

"சூடினார் கங்கையாளைச் சூடிய துழனி கேட்டங்கு
ஊடினாள் நங்கையாளும் ஊடலை ஒழிக்க வேண்டிப்
பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே
ஆடினார்".

பகீரதனுக்காகக் கங்கையைச் சிவன் தன் நிமிர் புன் சடையில் ஏற்பதையும், அது காரணமாக மலையான் மகள் ஊடியதையும், சிவன் தன் துணைவியின் ஊடலை ஒழிக்க முயற்சிப்பதையும் காட்டும் திருவுருவம் கங்கைவார் சடைக்கரந்தான் (கங்காதர மூர்த்தி) என்பதாம். ஆகமங்களின்படி சிவனது சடையில் கங்கை அமைக்கப்பட்டிருக்க வேண்டும். அவனுடைய நான்கு கைகளில் பின் இரு கைகளில் மழுவும் மானும் இருக்க வேண்டும். தனக்குப் போட்டி ஏற்பட்டுவிட்டது என்று ஊடல்

கொண்ட அன்னையின் ஊடலைத் தீர்க்க முன் இடக்கையால் அணைத்து முன் வலக்கை அன்னையின் தாடை அருகே காட்டப் படவேண்டும். அண்ணலை அடுத்து இடப்புறமாக உள்ள அன்னை பதட்ட நிலையில் தாபங்க நிலையில் காணப்படவேண்டும். வலக்கை கத்ய வலம்பித முத்திரையில் இருக்க, இடக்கையில் பூ இருக்கவேண்டும்.

இவ்வாருகத் தேவாரம் மற்றும் ஆகமங்கள் ஆகியவற்றில் குறிப்பிட்டுள்ளவற்றினின்றும் மாறுபட்ட திருவுருவம் ஒன்று சேலம் மாவட்டத்தில் தாரமங்கலம் கயிலாயநாதர் கோயிலில் காணப்படுகிறது. "கொங்கு நாட்டுச் சிற்பக் கருவூலமாக"த் திகழும் இந்தக் கோயிலில் உள்ள தூண்களில் காணப்படும் சிற்பங்கள் நம் முன்னோர்கள் கல்லில் கண்ட கைவண்ணத்தின் அரிய படைப்புகளாகும். இத்தகைய படைப்பு ஒன்று ஆடவல் லான் திருமுன்பை அடுத்துக் காணப்படுகிறது. இது "சிவசக்தி கோபம்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சிவன் அன்னையின் கோபத்தைத் தணிப்பதாக அமைந்துள்ளமையால், இப்பெயர் இடப்பட்டது. இத்தகைய திருவுருவங்கள் கங்கைவார் சடைக் கரந்தான் (கங்காதரமூர்த்தி) என்று அழைக்கப்பெறும். கங்கை யைச் சடையில் அமைக்காது சிவனின் பின்வலக்கையில் மழுவிற்குப் பதிலாக கத்திரி முத்திரையில் காட்டப்பட்டு இருப்பது இந்தத் திருவுருவிற்கும் ஏனைய இதுபோன்ற திருவுரு வங்களுக்கும் உள்ள வேறுபாடாகும். கங்கையைச் சடையில் தாங்கியதாகத்தான் தேவாரத்தில் சொல்லப்பட்டுள்ளதேயன்றி, கங்கையைக் கையில் ஏந்தியதாக எங்கும் கூறப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. "நதிச்சடைமுடியனுய்" என்று மகாகவி பாரதியாரும் கூறியுள்ளார். கங்கைவார் சடைக்கரந்தான் திருவுருவம் பல மாறுதல்கள் அடைந்துள்ளதாகத் திரு. சிவராம மூர்த்தி கூறியுள்ளார். முதலில் இந்தத் திருவுருவம் அன்னையின்றி அமைக்கப்பட்டதாகவும், நாளடைவில் அன்னையுடன் உருவாக் கப்பட்டதாகவும் குறிப்பிட்டுள்ளார். அத்தகைய மாறுதல்களில் கங்கையைக் கையில் ஏந்தியுள்ளதாக அமைந்துள்ளது வேறு எங்கும் காண இயலாத படைப்பு ஆகும். கங்கையைச் சடையில் கரக்காத காரணத்தால், இங்குள்ள திருவுருவைக் கங்கைவார் சடைக்கரந்தான் என்று அழைப்பது பொருத்தமாகத் தெரிய வில்லை. "கங்கை மணாளர்" என்று அப்பர் சுவாமிகள் குறிப் பிட்டதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

———

# இலக்கிய விருந்து!

[தி. நா. அறிவுஒளி, க. மு., கல். இ.,]

(முன் இதழ் கருகஆம் பக்கத் தொடர்ச்சி)

## இரவு வண்ணனை

ஆங்கில அறிஞர் ஆலிவர் கோல்டுசுமித்து 'அமைதி இரவில் அழகிய இலண்டன் நகரம்' (A City Night Place) என்னும் ஒப்பற்ற கட்டுரை வண்ணனை இலக்கிய வயங்கெழும வரைந்துள்ளார்.

அத்தகு வண்ணனை வளத்தை வண்டமிழில் நயந்துளும்ப அடிகளார் பதினைந்தாம் முடங்கலில் அழகொழுகத் தீட்டி யுள்ளார்:

"சென்ற இரவு ஒருமணி வரையில் எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அதனோடு, இந்தக் கொடிய வெயிற்காலத்தின் வெப்பமும், புழுக்கமுந் தாங்கக்கூடியனவாயில்லை. அதனால் மேன்மாடத்தின் மேற்றளத்தின் மேலேறி, அது வெறுந் திறப் பான வெளியாதலால் அங்கே உலாவிக்கொண்டிருந்தேன். அப்போது என் உள்ளத்தை மகிழ்விக்கத்தக்க தோற்றம் ஒன்றும் இல்லை. வானத்தில் நிலவொளியில்லை. எங்கும் இருள் சூழ்ந் திருந்தது. வானத்தின்கட் பல கோடிக்கணக்காய்க் காணப் பட்ட வான்மீன்களும் எனக்கு ஆறுதலைத் தரவில்லை. எனக்குண்டான மனப்புழுக்கம் உடம்பின் புழுக்கத்தால், இருண்ட அவ்வானை ஓர் அரக்கன் உடம்பாகவும், அதிற் றோன்றும் மீன்களை அவனுடம்பிற்றோன்றிய வியர்வைத் துளிகளாகவும் நினைத்தேன். கீழே தெருவிலுள்ள *தூண் விளக்குகளில் அவ் விளக்கேற்றும் வேலைக்காரன் நிறைய எண்ணெய் விடாமல் மிச்சம் பிடித்துக்கொண்டு போனமையாற் போலும் அவற்றிற் சில அணைந்து போயின; வேறு சில அணையுந்தறுவாயில் இருந்தன. ஊர்காவற் சேவகன் தூக்க மயக்கத்தால் மெல்ல நடந்தபடியாய் இடையிடையே சீழ்க்கை யடித்துக்கொண்டு செல்வதை அறிந்தேன்; இஃது எனக்கு ஒரு

---

*சென்னையில் முன்னர் 'ராந்தல்' என்றழைக்கப்பட்ட மண்ணெண் ணெய் விளக்குகள் கற்றூண், இரும்புத் தூண்களில் பொருத்தியிருந் தமை புலப்படும்.

வகையான அச்சத்தைத் தந்தது. இதுவுமல்லாமல், எதிரே யுள்ள குடிமக்கள் தோட்டத்தில் இராக்காலத்துப் பறவைகளான ஆந்தை கூகை கேட்டான் முதலியன இரைதேடிக் கூப்பிடும் ஒலியானது யான் வெருக்கொள்ளும்படி செய்தது. ஆனால், இவ் விருளின் ஊடே ஊடே, மிக உயர்ந்த நகர விளக்குக் கூண்டின் ஒளி அடுத்தடுத்துத் தோன்றியவாருய்ச் சுழன்று செல்கையில் அஃது என் கருத்தைக் கவர்ந்தது. நள்ளிருட்காலம்போல் தாங்குதற்கரிய துன்பம் வந்து கவிந்த காலத்திலுங்கூடச் சுழன்று செல்லும் அவ் விளக்குக் கூண்டின் அழகிய ஒளிபோல் இறைவனருளால் இன்பமும் இவ்வுலக வாழ்க்கையில் இடையிடையே சுழன்று வந்து மக்கள் உயிரைத் தளிர்க்கச் செய்யுமென எண்ணினேன். இருள் செறிந்த இராப் பொழுதிலும் முயற்சி மிகுந்து இரைதேடி இயங்குஞ் சில பறவை களைப்போல் மக்கள் சிலருந் தமக்குப் பேர் இடுக்கண் வந்த பொழுதிலுஞ் சுறுசுறுப்புடையராய் முயற்சி செய்யவேண்டுமே யல்லாமல் மனந்தளர்ந்து மடிந்திருத்தல் ஆகாதெனவும் உணர்ந்தேன்''

(கோகிலாம்பாள் கடிதங்கள் : ப : 174-175)

இரவு வண்ணனைகளில் இத்தகு இலக்கியச் செறிவுடைய உரையோவியம் வேறு இல்லையென்பது கருதத்தக்கது.

### கனவு

தொடர்நிலைச் செய்யுள் நூல்களில் 'கனவு' இடம்பெறுவ துண்டு. பல மொழிகளின் இலக்கியங்களிலும் இவ்வாட்சியைக் காண்கிறோம்.

கோகிலா காணும் கனவு, அவளுக்கு எதிர்காலத்தில் நிகழ விருப்பதை முன்னதாக உணர்த்துவதாக அமைகிறது. சிலம் பிலும் இத்தகைய முன்னுணர்த்துங் கனவுகள் உள.

இந்நெறி பாவியங்களில் அமைவன என்பர். அடிகளாரின் உரைநடை பாவியத்தில் கனவுக்காட்சி அந்நெறியில் உளதென உன்னலாம்.

### நடைநலம்

தமிழில் தமக்கெனத் தனித்தன்மை நடையினை ஆண்டு, புகழ் பெற்றோர் ஒருசிலரேயாவர். மறைமலையடிகளார், திரு. வி. க., அண்ணு ஆகியோர் நடைநலம் தமிழரை நனிகவர்ந் தனவாம்.

மேனாட்டறிஞர் 'நடை'பற்றி விரிந்த ஆய்வுகள் ஆற்றி வருகின்றனர்.

''ஓர் ஆசிரியரை அவர் இலக்கிய நடையே நன்கு காட்டும்'' என்பர்.[1]

''நோக்கம்-எழுத்தாளர்-மொழி என்னும் மூன்றின் இசைவியைபினால் இலக்கிய நடை அமைகிறது'' என்பார் பீட்டர் வெசுடுலேண்டர்[2].

''எண்ணத்தைத் (பொருளை (அ) கருத்தை) உணர்த்தும் உருவமே நடையாகும். ஆசிரியரின் அறிவிலிருக்கும் கருத்தை முழுமையாக வெளிப்படுத்துதலே நடையை உருவாக்குகிறது. ஆசிரியரிடம் சொற்களஞ்சிய அறிவு மிகப் பரந்துபட்டிருக்குமாயின், சொற்களை வெற்றியோடு ஆளுந்திறமிருக்குமாயின் (சொல்லாளுந் திறனும், சொல்லாற்றல் திறனும்) அது நல்ல நடையினதாகும். சொற்கள்வழி கருத்தைத் தக்கபடி உணர்த்துதலே நடைநலனாகும்''.[3]

''ஆசிரியரின் நோக்கே (பார்வை (அ) ஆயும் கோணம்) நடை'' என்பார் அறிஞர் பஃபூன் என்னும் ஆய்வாளர்[4].

''ஆசிரியரின் எண்ணுந் திறனின், உணருந் திறனின் வாயிலே நடை'' என்பார் பிளாபர்ட்டு.[5]

''எதை விளக்கி எழுதுகிறோமோ, அதைக் கற்பவர் கண்டும் தொட்டும் உணர்வதாக மனமயங்கும் வண்ணம் எழுதுமாற்றலே சீரிய நடையாகும்'' என ஆண்டன் செக்காவ்மாக்சிம் கார்க்கியினிடம் கூறினார்.[6]

---

1. Style is the man himself.

2. Style requires the closest harmony between object, writer, and language—PETER WESTLAND.

3. Literary style is that form of expression which perfectly represents the idea in the writer's mind. If the author has a large vocabulary at his command and skill in arranging his words, he will be able to give an idea exact expression at least in theory—(Literary Appreciation) P. 73.

4. "Style—It is a way of seeing"—Buffon.

5. "It is a way of thinking or of feeling"—Flaubert.

6. "Tchekov told Gorky that real writing was a seeing or touching of what is described."

"எண்ணத்தின் ஒப்பனை (உடை)யே இலக்கிய நடை" என்பார் அறிஞர் போப்பு.[7]

நடைபற்றிய பல்வகைக் கருத்துகளைப் பிழம்பாகத் திரட்டுங்கால், 'ஆசிரியர் தாம் உணர்வதை, உணர்ந்த வண்ணமே உணர்த்துவது இலக்கிய நடை' என்றும், 'புலவர் கண்டதும், உண்டதும், கொண்டதும் எவ்வண்ணமோ, அவ் வண்ணமே சுவைஞர் உணரும்படி விண்டுரைப்பதே இலக்கிய நடை' என்றும் தெளியலாம்.

அடிகளாரின் நடை, 'பெருமித நடை' அல்லது 'பீடுநடை' யாகும்.

"முப்பழம் பிழிந்த சாற்றைக் கட்டுப்பாகோடு கலந்து ஒரு சிறு மதலைக்கு ஊட்டினாற்போலத் தாங்கள் எழுதுங் கடிதங்களில் உள்ள சொல்லும் பொருளும் தளர்ந்த என் உயிரை இடை யிடையே தளிர்க்கச் செய்கின்றன" (கோ. க. ப : 127)

தமிழகம் என்னுந் தளிர்க்குழந்தைக்கு உயிரூட்டும் தமிழ் அமிழ்தமாக அடிகளின் நூலும் நடையும் அமைந்துள்ளன.

(தொடரும்)

---

7. "style is the dress of thought"—POPE.

———

## தமிழ்த் தென்றல் திரு. வி. க.
## நூற்றாண்டு விழா நினைவு—
## திருக்குறள் தொடர் சொற்பொழிவுகள்

தமிழ்த் தென்றல் திரு. வி. க. நூற்றாண்டு விழா நினைவினை முன்னிட்டு, சென்னை நக்கீரர் கழகத்தார் நகரின் பல பகுதிகளில் திருக்குறள் தொடர் சொற்பொழிவினை நடத்தி வருகின்றனர். அவ் வகையில் கடந்த 8—12—82 அன்று மாலை புரசை கங்காதர ஈசுவரர் கோயில் தெருவிலுள்ள மாநகராட்சி உயர்நிலைப் பள்ளி யில் பேராசிரியர், அ. கி. பரந்தாமனார் அவர்கள் தலைமையில், பேராசிரியர் நா ரா. முருகவேள் அவர்கள் "சங்க இலக்கியங்களும் திருக்குறளும்" என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றினார். அடுத்து, 11—1—83இல் ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றத்தில் முனைவர் ஔவை நடராசன் அவர்கள் தலைமையில், முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் "திரு. வி. க.வும் திருக்குறளும்" என்னும் பொருள்பற்றி அரிய சொற்பொழிவாற்றினார்.

# பேராசிரியர் மணிவிழா

(19—12—1982)



மணிவிழாக்கண்ட
பேராசிரியர் க. அன்பழகன், எம். ஏ.

# பேராசிரியர் மணிவிழா

அரசியல் உலகில் 'பேராசிரியர்' என்ற தனிச் சிறப்புக்குரிய முன்னாள் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், இந்நாள் சட்டமன்ற உறுப்பினரும், தி. மு. கழகப் பொதுச் செயலாளருமான பேராசிரியர் க. அன்பழகன் அவர்களின் மணிவிழா 19—12—82 அன்று, சென்னை, பெரியார் திடலில் மிகச் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது.

இவ்விழாவினையொட்டி இளைஞர் அணியின் சார்பில் கருத்தரங்கமும் கவியரங்கமும் நடைபெற்றன. அன்று மாலை மாபெரும் பாராட்டுக் கூட்டமொன்று டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. முன்னாள் முதல்வர் பக்தவத்சலனார் அவர்கள் பேராசிரியருக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் விழா மலரினை வெளியிட்டார். கலைஞரவர்கள், "அம்பாசிடர் கார்" ஒன்றைப் பேராசிரியருக்குக் கழகத்தின் சார்பில் பரிசாக வழங்கிப் பாராட்டித் தலைமையுரையினை ஆற்றினார்.

புதுவை முதல்வர் இராமச்சந்திரன், திராவிடர் கழகப் பொதுச் செயலாளர் கீ. வீரமணி, டி. செங்கல்வராயன், கே. டி. கே. தங்கமணி, ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார், முனைவர் வ. சுப. மாணிக்கம், பேராசிரியர் என். ஜி. ரங்கா, நாடாளுமன்றத் துணைத்தலைவர் ஜி. இலட்சுமணன், முன்னாள் துணைவேந்தர் நெ. து. சுந்தரவடிவேலு, பேராசிரியர் அ. கி. பரந்தாமனார். புலவர் அன்பு கணபதி மற்றும் பெருமக்கள் பலர் பேராசிரியரின் நாட்டுத் தொண்டினையும், மொழித் தொண்டினையும் பாராட்டி வாழ்த்துரை வழங்கினர். இறுதியில் பேராசிரியர் அவர்கள் பொருள் பொதிந்த நீண்டதோர் ஏற்புரை வழங்கினார்.

பேராசிரியர் அன்பழகன் அவர்கள் நம் சை. சி. நூற்பதிப்புக் கழக நூலாசிரியர்களுள் ஒருவர் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்க செய்தியாகும். அத்துடன் அவர்கள் நம் கழக விழாக்கள் பலவற்றில் பங்கு கொண்டு, கழகப் பணிகளைப் பாராட்டியுள்ளார். நம் கழகத்திடமும் கழக ஆட்சியர் வ. சு. அவர்களிடமும் நீண்ட தொடர்பும் பற்றும் கொண்டவர்.

பேராசிரியர் அன்பழகன் அவர்கள் திருவாரூரையடுத்த காட்டூரில் 1922ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தையார் திரு. மு. கலியாணசுந்தரனார் அவர்கள் தேசிய

இயக்கத்திலும், சுயமரியாதை இயக்கத்திலும் ஈடுபட்டவர். அன்பழகன் இளமையில் ராமையா என்னும் பெயருடன், மாயூரம் உயர்நிலைப்பள்ளியில் பயின்றார். பின்னர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படிக்கும்போதே பெரியாரின் இந்தி எதிர்ப்பு இயக்கத்திலும், பகுத்தறிவுக் கொள்கை விளக்கத்திலும் ஈடுபட்டார். பேரறிஞர் அண்ணா அவர்களையும், பெரியார் அவர்களையும் பல்கலைக் கழகத்திற்கு அழைத்துப் பேசச் செய்த பெருமை இவருக்குண்டு.

1944 முதல் சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றினார். 1957ல் தமிழ்நாடு சட்டமன்ற உறுப்பினராகவும் 1962ல் தமிழகச் சட்டமன்ற மேலவை உறுப்பினராகவும் திகழ்ந்தார். 1967ல் நாடாளுமன்ற உறுப்பினராகி, தி. மு. க தலைவராகப் பொறுப்பேற்றார். 1971ல் தமிழ்நாடு சட்டப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்று, கலைஞரின் அமைச்சரவையில் நல்வாழ்வுத் துறை அமைச்சராகப் பணியாற்றினார். நம் தமிழ் மொழிப் பற்றிலேயே வளர்ந்து தனித் தமிழ் ஆர்வங்கொண்டு, பேச்சாலும் எழுத்தாலும் தமிழ்த் தொண்டாற்றி வருபவர். கொள்கையில் தெளிவு—அரசியலில் துணிவு— நண்பர்களிடத்தில் கனிவு—பெரியோர்களிடத்தில் பணிவு ஆகியவை இவர் தம் சிறப்பியல்புகள். 'உரிமை வாழ்வு' 'கலையும் வாழ்வும்' 'விடுதலைக் கலைஞர்', 'வகுப்புவாரி பிரதிநிதித்துவம்' 'தமிழ்க்கடல் அலை ஓசை' முதலானவை இவரியற்றிய நூல்களாகும்.

இத்தகைய பேராசிரியப் பெருந்தகை அவர்கள் மேலும் முத்து விழா, நூற்றாண்டு விழா என விழாக்கள் பல கண்டு வளமுடனும் நலமுடனும் வையத்துள் வாழ்வாங்கு வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானாக.

நாடுமுழுதும் உரை பெருக்கும் அன்பழகர்
பீடுபிறர் பேச நான் பெற்றமகிழ் சொல்லரிதே!

—பாவேந்தர் பாரதிதாசன்

———

## யார் இதற்கு விடை தருவார்?

அன்னை மொழி தமிழ்; இதற்கோர் அட்டியில்லை என்றாலும்
அம்மொழிக்குத் தந்தைமொழி சமக்கிருதம் ஆகுமென்று
அஞ்சாமல் அறைகின்றார் அனைத்துலக குருஒருவர்
அன்னவரின் கூற்றினிலே பொருளுண்டோ அன்பர்களே!
ஆரிதற்கு விடைதருவார்? ஆர்வலரைக் கேட்கின்றேன்.

—த. சி. வேலன்

# சித்தாந்த வித்தகர்
# கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார்
# மறைவு

சித்தாந்த வித்தகர் கயப்பாக்கம் மு. சோமசுந்தரம் செட்டியா ரவர்கள் 31—12—82ல் தமது 86 ஆம் அகவையில் இறையடி சேர்ந் தார்கள் என்னுஞ் செய்தி அறிந்து பெரிதும் வருந்துகிறோம்.



திரு. செட்டியாரவர்கள் தமது வாழ்நாளின் பெரும் பகுதியைச் சிவத்தொண்டிலும், திருக்கோயில் திருப்பணிகளிலுமே செலவிட்ட திருவினராவார். சென்னையில் சில கோயில்களிலும், பெங்களூர் கண்டோன்மென்டில் ஏகாம்பரநாதர் கோயிலிலும் சேக்கிழார் பெருமான் திருவுருவினை நிலைப்படுத்தினர். மற்றும் சென்னையிலும் வெளியூர் களிலுமாக இருபது இடங்களில் பன்னிரு திருமுறைக் கோயில்களை நிறுவியுள்ளார். சைவப் புராணங்களும், நாயன்மார் வரலாறுகளுமாக ஏறத்தாழ நாற்பது நூல்களை வெளியிட்டுள்ளார்.

தொண்டைநாட்டில், செங்கை மாவட்டத்தைச் சேர்ந்த கயப்பாக்கம் என்ற ஊரில் 26—2—1896ல் தோன்றிய இவர் தமது இரண்டாவது அகவையிலேயே தந்தையாரை இழந்ததால் சிறிய தந்தையார் கயப் பாக்கம் சதாசிவ செட்டியாரவர்களால் வளர்க்கப் பெற்றார். அவரே இவருக்கு அறிவுத் தந்தையுமானர். 1919ல் சகதாம்பாள் என்னும் மங்கை நல்லாளை மணந்து இரு மகன்களுக்கும் ஒரு மகளுக்கும் தந்தை யாகி வாழ்ந்த இவர் 1972ல் மனைவியை இழந்தார். அத்துயர் நீங்க இறைபணியில் ஈடுபட்டார். இவர்தம் சைவப் பணிகளைப் பாராட்டி மதுரையாதீனம் இவருக்குச் 'சித்தாந்த வித்தகர்' என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தது. காஞ்சி காமகோடி பீடாதிபதி சகத்குரு சங்கராச் சாரியாரவர்களும், மற்றும் தமிழகத்து மடாதிபதிகள் அத்துணை பேரும் இவரைப் பாராட்டியுள்ளனர். இங்ஙனம் வாழ்வாங்கு வாழ்ந்த இச் சைவப் பெரியார் 31—12—82இல் இறையடி சேர்ந்தார்.

திரு செட்டியாரவர்கள் நம் கழக ஆட்சியரிடமும், கழகத்திடமும் நெருங்கிய தொடர்பும் பற்றும் கொண்டவர். பேச்சாற்றல் எழுத் தாற்றல் மிக்கவர். மறைந்த திரு. செட்டியார் அவர்களின் குடும்பத் தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

———

## அன்பர்கள் கவனிக்க

நம் கழக முகவரியில் சென்னை-600 001 என்றிருந்த அஞ்சல் குறி யீடு, இப்போது 600 108 என மாற்றப்பட்டிருப்பதால் பின்னுள்ள மாற்றத்தைக் கவனித்து இனி அவ்வண்ணமே குறிப்பிட வேண்டு கிறோம்.

ஆசிரியர்.

# செய்திகளும் குறிப்புகளும்

## டாக்டர் மா. இராசமாணிக்கனார் இலக்கிய மன்றத் தொடக்க விழா

டாக்டா மா. இராசமாணிக்கனார் அவர்கள் பெயரில் "சைவ நெறிக் காவலர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் இலக்கிய மன்றம்" என்னுமொரு மன்றம் நிறுவப்பெற்றுள்ளது. இம் மன்றத்தின் தொடக்கவிழா 2—1—83 அன்று மாலை மயிலாப்பூரிலுள்ள சாயிபாபா கோயில் வசந்த அரங்கத்தில், சட்டமன்ற மேலவைத் தலைவர் முனைவர் ம.பொ.சிவஞானம் அவர்கள் தலைமை தாங்க, 'தமிழரசு' இணையாசிரியர் கவிஞர் முத்துக்காளத்தி, எம்.ஏ., அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த, ஆட்சி மொழிக் காவலர் கீ. இராமலிங்கனார், முனைவர்கள் மெ. சுந்தரம், கவிஞர் வல்லம் வேங்கடபதி ஆகியோர் வாழ்த்துரை வழங்க, மிகச் சிறப்பாக நடந்தேறியது.

## 'பாரதி காலமும் கருத்தும்'' நூல் வெளியீட்டு விழா

மதுரை மீனாட்சி புத்தக நிலையத்தின் சார்பில், 25—12—82 அன்று மாலை, மதுரை குசராத்தி சமாசத்தில் 'பாரதி காலமும் கருத்தும்' நூல் வெளியீட்டு விழா, முனைவர் எஸ் இராமகிருட்டிணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் நூலினை வெளியிட்டார். பேராசிரியர் பலர் உரை யாற்றினர்.

## "பாரதி இயல்'' நூல் வெளியீட்டு விழா

பணிவாசகர் நூலகம் வெளியிட்டுள்ள, மதுரை காமாரசர் பல்கலைக்கழக அஞ்சல் வழிக் கல்வித்துறை ஆசிரியர்களின் ஆய்வுக் கட்டுரைத் தொகுப்பான 'பாரதி இயல்' என்னும் நூலின் வெளியீட்டு விழா, 19—12—82 அன்று மதுரையில், முனைவர் தமிழண்ணல் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர் பலர் வாழ்த்துரை வழங்கினர்.

## "ஜீவா என்றொரு மானுடன்'' நூல் வெளியீட்டு விழா

மறைந்த பொதுவுடைமைக் கட்சித் தலைவரும், தமிழ்ப் பற்றுளரு மான திரு. ப. ஜீவானந்தம் அவர்களின் 75ஆவது ஆண்டு நிறைவினை நினைவு கூருமுகத்தான் 17—12—82 அன்று மாலை, சென்னை அண்ணா சாலையிலுள்ள தேவநேயப் பாவாணர் நூலகக் கட்டிடத்தில், திரு. பொன்னீலன் அவர்கள் எழுதிய "ஜீவா என்றொரு மானுடன்'' என்னும் நூல் வெளியீட்டு விழா, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் நிறுவனத்தின் சார்பில் நடைபெற்றது. மாண்புமிகு அமைச்சர் காளிமுத்து அவர்கள்

நூலினை வெளியிட்டார். இந்தியப் பொதுவுடைமைக் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் திரு. ப. மாணிக்கம் அவர்கள் தலைமை தாங்க திருவாளர்கள் எம். கல்யாணசுந்தரம், எம். பி., சகஸ்ரநாமம், திருமதி பத்மாவதி சிவானந்தம் ஆகியோர் உரையாற்ற விழா இனிது நடந்தேறியது.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, கசூ௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | திருமுருக விசாகநம்பி | 5—00 |
| ,, | G. காமேஸ்வரி, எம்.ஏ., தூய நெஞ்சக் கல்லூரி, திருச்சி-2. | 50—00 |

---

# மதிப்புரை

## பாரதிதாசன் ஒரு நோக்கு

*[ஆசிரியர்: டாக்டர் ச. சு. இளங்கோ, சிந்தனையாளர்கள் பதிப்பகம், 51 சாந்தோம் நெடுஞ்சாலை, சென்னை-28, விலை ரூ. 15/-]*

பாரதிதாசனாரின் படைப்புகளை ஆய்வு செய்வதையே குறிக்கோளாகக் கொண்ட இந்நூலாசிரியர் பாரதிதாசன் ஆத்திசூடிகள், பாரதிதாசன் உணவியல் நெறிகள், பாட வேறுபாடுகள் இணைப்புகள் என்னும் தலைப்புகளில் பாரதிதாசனின் பாடல்களைத் திறனாய்வு செய்துள்ளார். பாரதிதாசனாரை முழுமையாகப் புரிந்துகொள்ள விழைவோர்க்கு பயன்படத்தக்க அரிய ஆராய்ச்சி நூல். நூலாசிரியரின் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது.

## சரித்திரத்தை மாற்றிய சதி வழக்குகள்

*[ஆசிரியர்: சிவலை இளமதி, முன்னேற்றப் பதிப்பகம், 21 மேட்லி ரோடு, தியாகராய நகர், சென்னை-17. 530 பக்கங்கள் விலை: ரூ. 25-00.]*

உடல், பொருள், ஆவி மூன்றையும் நாட்டுக்காக இழத்தல் (தியாகம் செய்தல்) என்பது இந்நாளில் வெறும் வழக்குச் சொல்லாகவே நடமாடக் காண்கிறோம். ஆனால், தன்னல இழப்பு (தியாகம்) என்பதன் உண்மை விளக்கத்தை அறிய விழைவோர் இந்நூலினைப் படித்தறிய வேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். ஆங்கிலேயர் ஆட்சி

பினின்று நாடு விடுதலை பெற வேண்டும் என்ற உணர்ச்சியால் உந்தப் பட்டோர் எத்தகைய தீரச் செயல்களை மேற்கொண்டனர் என்பதைப் படிக்கும்போது உள்ளம் நெகிழ்கின்றது. இற்றை நாள் பதவி தேடும் அரசியல்வாதிகள் (Power politicians) இவற்றைப் படித்துப் பார்த்தல் வேண்டும். சுருங்சக்கூறின் 1871 முதல் 1946 முடிய இந்திய தேசிய காங்கிரஸ் இயக்கத்தின் வரலாறே இந்நூல் எனலாம். இதனைத் தொகுத்த இந்நூலாசிரியரின் அரிய முயற்சி பாராட்டத்தக்கது.

## குடியரசு இதழில் பாரதிதாசன் பாடல்கள்

[ஆசிரியர்: டாக்டர் ச. சு இளங்கோ, சிந்தனையாளர் பதிப்பகம், 51 சாந்தோம் நெடுஞ்சாலை, சென்னை-28]

ஏறக்குறைய 60 ஆண்டுகட்கு முன்னர் குமுகாய சீர்திருத்தப் பணிகளில் 'குடியரசு' இதழ் எத்தகைய சீரிய பணிகளை ஆற்றிவந்துள்ளது என்பதை அறிய விழைவோர் பழைய குடியரசு ஏடுகளைப் புரட்டினால் போதும். எனினும் அவை அனைத்தையும் ஒரே நேரத்தில் காண இயலாதோர்க்கு இப்புத்தகம் ஓரளவு துணைபுரிய வல்லது. இதில் பாரதிதாசனார் அவ்வப்போது எழுதிய பாடல்களையும் அவை பற்றிய திறனாய்வுகளையும் படித்து மகிழலாம்.

## திரு. வி. க. வாழ்க்கையும் தொண்டும்—ஒரு கைவிளக்கு

[ஆசிரியர்: டாக்டர் அ. நாகலிங்கம், பர்வதவர்த்தனி பதிப்பகம், 5, வ. உ. சி. தெரு, காமராச நகர், சீனிவாச நகர் அஞ்சல், சென்னை-600 063. விலை: ரூ. 7-00.]

திரு. வி. க. அவர்களின் நெருங்கிய நண்பரான திரு. தி. கி. நாராயணசாமி அவர்களின் 75ஆம் ஆண்டு வெளியீடாக வெளிவந்திருக்கும் இந்நூல், இலங்கை, தெல்லிப் பழையில் 1981, மேத் திங்கள் 8ஆம் நாளன்று நடைபெற்ற சைவசித்தாந்த மகா சமாசத்தின் 75ஆம் ஆண்டு விழாவில் வெளியிடப்பெற்றது. இந்நூலில் வாழ்வாங்கு வாழ்ந்து, நாட்டுக்கும் மொழிக்கும், தொழிலாளர் உலகிற்கும் தொண்டாற்றிய தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களின் வாழ்க்கை வரலாறு சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையில் புள்ளி விவரங்களோடு கூறப்பட்டுள்ளது. இது சிறப்பாக ஆராய்ச்சியாளர்க்கும், திரு. வி. க. அவர்களைப் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள விழைவோர்க்கும் பயன்படத்தக்க நல்லதோர் ஆற்றுப்படை நூலாக அமைந்துள்ளது. இதனைத் தொகுத்த நூலாசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

# கழகப் புதிய வெளியீடுகள்

## கழக அமைச்சர் திருவரங்கர் வரலாறு

**ஆசிரியர்:** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நிறுவனரும், மறைத்திரு மறைமலையடிகளாரின் மருகரும், கல்வித்துறையின் பெருமுயற்சியாளரும், சைவ சமயக் காவலரும், பதிப்புத்துறை ஆர்வலரும், கழக ஆட்சியர் தாமரைச் செல்வரின் தமையனரு மான உயர்திரு திருவரங்கனாரின் இவ் வரலாற்று நூல், கழக இலக்கியச் செம்மல் அவர்களால் சீரியமுறையில் செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. டாக்டர் பா. நடராசன் அவர் களின் முன்னுரையுடனும், ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங் கனாரின் சீரிய ஆங்கில முன்னுரையுடனும் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய இன்றியமையாத வரலாற்று நூல். 200 பக்கங்கள். விலை ரூ 8 00

## வையை வளம்

**ஆசிரியர்:** கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

இந்நூல் பாண்டி நாட்டின் வளத்திற்கும் வாழ்விற்கும் வகை செய்யும் வையை ஆற்றின் பாங்கினைப் பல்வேறு திருப்பங்களி னின்று அகப்புறச் சான்றுகளுடன் ஆராய்ந்து எழுதப்பெற் றுள்ளது வளமான செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இடம்பெற்று ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படத்தக்க நூல்.

விலை ரூ. 7 00

## வள்ளல் எழுவர் (நாட்டிய நாடகம்)

**ஆசிரியர்:** கலைமாமணி கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்

கடைஎழுவள்ளல்களின் வரலாற்றைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையில், அதே நேரத்தில் கண்ணுக்கும் கருத் துக்கும் விருந்தளிக்கும் நாட்டிய நாடகமாகவும் எழுதியுள்ளார் இந்நூலாசிரியர். கவிதைகள் இனிமையும் எளிமையும் கொண்டு படித்துச் சுவைக்கவும் நடித்துக் காணவும் ஏற்ற வகையில் அமைந்துள்ளன. பள்ளிகளிலும், கலைக் கழகங்களிலும் இருக்க வேண்டிய பயனுள்ள நாட்டிய நாடகம். விலை ரூ. 2 50

## கழக நிலையங்களில் கிடைக்கும் பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| கண் மருத்துவம்—வே. இரா. மாதவன் | 50 00 |
| முத்திநெறி—பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் | 28 00 |
| இன்றும் நாளையும்—லக்ஷ்மி | 16 50 |
| காளியின் கண்கள்—லக்ஷ்மி | 14 00 |
| சமயக்கட்டுரை மாலை—டாக்டர் வெ. சு. அழகப்பன் | 8 00 |
| செம்மை தரும் சிந்தனைகள் — எஸ். இராஜு செட்டியார், பி.ஏ., பி.எல். | 7 00 |
| கல்கி சிவகாமியின் சபதம் (நாடகக் காப்பியம்) —கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் | 5 00 |
| சுப்பிரமணிய பாரதியின் கண்ணன் பாட்டு— காப்பிய நாடகம்—கூவும் குயில்—க. சி. கமலையா | 6 00 |
| கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் மணிவிழா மலர் | 3 00 |
| அரபிமி அந்தாதி உரை ,, | 2 00 |

பதிவு எண் 4899. Jan. 1983



அப்பர் அச்சகம், சென்னை-108.